# முகவுரை

இன்பப் புரட்சி என்ற இந்த நாடகம் காலத்துக் கேற்பப் பொருத்தமான புதிய பெயரைத் தாங்கியிருக் கிறதேயன்றி உண்மையில் வடமொழியில் எழுதப்பட் டுள்ள மிருச்சகடிகம் என்னும் நாடகத்தின் தழுவலேயாகும்.

நாடகம் என்னும் இலக்கிய வகை மிகவும் தொன்மை வாய்ந்தது. வடமொழியில் இந்த இலக்கியம் பழங்காலந் தொட்டே வளர்ச்சி பெற்றுள்ளது. பாஸன், சூத்ரகன், காளிதாஸன், பவபூதி போன்ற பல நாடக ஆசிரியர்கள் தாம் எழுதிய வடமொழி நாடகங்களால் மிகவும் புகழ் பெற்று விளங்குகிறுர்கள். இவர்களுள் சூத்ரகரைத் தவிர ஏனையோர் புராணம் இதிஹாஸம் போன்ற நூல்களி லிருந்து கதையை அப்படியே எடுத்துக் கொண்டோ அல் லது தழுவியோ தத்தம் திறனுக்கு ஏற்றபடி கூட்டியும் குறைத்தும் சுவைபட எழுதினர். இவை பாரத நாட்டுக் கதைகளைத் தழுவியவை யாதலின் இந்திய நாட்டினரே மிக வும் ரஸிக்கத்தக்கபடி அமைந்தன. இவ்வாறன்றி வெளி நாட்டினரும் ரஸித்துப் பாராட்டும்படி ஒரு கற்பனைக் கதையை அமைத்து, அதிலே காதலொடு அரசியலையும் புகுத்தி, அந்தக் காலத்திலேயே நாடகம் எழுதிய அற்புதக் கவிஞர் சூத்ரகர் என்னும் மன்னராவர். அவர் எழுதியுள்ள மிருச்சகடிகம் ஈடும் எடுப்புமற்ற—தலை சிறந்த ஒரு புரட்சி நாடகம் என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டுள்ளனர்.

மிருச்சகடிகம் என்னும் தொடர், மண் வண்டியைப் பற்றிய நூல் என்ற பொருள் அமைந்ததாகும். செல்வனு யிருந்து விதியினுல் ஏழ்மையுற்ற சாருதத்தனின் ஐந்து வய

துப் புதல்வன் ஒரு மண் வண்டியை இழுத்துக் கொண்டு வருகிறுன்; அண்டை வீட்டுச் சிறுவனது தங்கத்தாலான வண்டியைக் கண்டு தனக்கும் அதுபோன்ற பொன் வண்டியே வேண்டுமென்ற பிடிவாதத்தொடு அழுகிறுன். அது காரணமாகப் பின்பு நிகழ்ந்தவற்றையும், அவ்வாறு நிகழ்வதற்கு முன்னுல் கதைக்கு வேண்டிய முற்பகுதியையும் அழகாக விவரித்துள்ள நாடக மாதலின் மிருச்சகடிகம் என்னும் பெயரமைந்தது என்று அறிஞர் கூறுவர்.

இவ்வாறெல்லாம் பழமையில் புதுமையைக் காட்டி நாடகம் அமைத்த சூத்ரகர் யார், எக்காலத்தில் இருந்தவர் என்பது பற்றிய ஆராய்ச்சி இன்னமும் உறுதியான முடிவிற்கு வந்த பாடில்லே. நாடகமே அவரால் எழுதப்பட்டதோ அல்லது வேறு யாராலேயோ எழுதப்பட்டு அவர் பெயரைத் தாங்கி நிற்கிறதோ என்றெல்லாம் ஐயப்படும் ஆராய்ச்சியாளரும் உண்டு. அது எப்படியிருந்தாலும் மிருச்சகடிக ஆசிரியர் அந்நாளிலே சர்வாதிகார ஆட்சியை அழித்து, ஜனநாயக ஆட்சிமுறையை நிலே நாட்டத் தூண்டும் மனப்பண்பு வாய்ந்தவர் என்பது அவரது நாடகத்தைப் படித்த அனேவரும் ஒப்ப முடிந்த முடிவாகும். மேலும் அவர் நாடகத்தில், காதல், களவு, சூது, பொய், கொலே முதலியனவும் இடம் பெற்றுச் சுவையூட்டுகின்றன. அவர் காட்டும் அரசியல் புரட்சி ரத்தம் சிந்தாமல், கொடுமையில்லாமல், எவர்க்கும் தீங்கு இழையாமல் நடந்தேறி முடிவில் எல்லோருக்கும் இன்பத்தையே அளித்தலின் இந்நூலுக்குப் புதுமையாக 'இன்பப் புரட்சி' என்ற பெயர் சூட்டப் பட்டது.

இந்நூலால் அக்காலத்து நிகழ்ச்சிகளாகப் பலவற்றை நாம் அறிகிறோம். காமன் விழாக் கொண்டாட்டம், ஆளும் மன்னன் திறமையற்றவனுயிருந்தால் நாட்டில் தீயவர்களின் கை ஓங்குதல், சூதாடும் முறை, அதில் தோற்

றவர் படும் பாடு, வம்பர்களின் சூழ்ச்சி, திருடர்கள் கையாளும் தந்திரங்கள், உல்லாசப் பொழுது போக்கிற்காக மக்கள் நந்தவனங்களுக்குச் செல்லுதல், நீதி மன்றத்தின் அமைப்பு, நீதிபதிகளின் சிறப்பு, அவர் குற்றங்களை விசாரிக்கும் முறை, அரசாங்க அதிகாரிகளும் அரசனின் உறவினரும் தம் செல்வாக்கால் நீதிபதியின் தீர்ப்பையே மாற்றுதல், குற்றவாளிகளுக்குக் கொலைத் தண்டனை விதித்தல், கொடிய ஆட்சியை எதிர்த்து மக்கள் புரட்சி செய்தல், அவ்விதப் புரட்சிக்கு ஒருவர் தலைமை தாங்குதல், சாதாரண மனிதன் மக்களின் ஆதரவினால் மன்னனாதல் போன்ற சம்பவங்கள் இன்று நடப்பது போலவே இந்த நாடகத்தில் காணப்படுகின்றன. பண்டைக்காலத்திய பிற வடமொழி நாடகங்களுள் எதிலுமே இப்படிப்பட்ட சம்பவங்கள் வர்ணிக்கப்படவில்லை. இதனால் ஏனைய வடமொழி நாடகங்களினும் இதற்குத் தனிச்சிறப்பு ஏற்பட்டுள்ளது.

மேற்கூறிய காரணங்களால் இந்த நாடகம் பல்வேறு மொழிகளிலும் பெயர்க்கப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் பல மொழி பெயர்ப்புக்கள் உள்ளன, [A. W. Ryder. (Eng) Harvard oriental Series, America. 1905. University of Illynoise. R. P. Oliver (Eng.) America 1938. Wilson (Eng.) England]. அமெரிக்காவிலுள்ள ஹாவர்ட் பல்கலைக் கழகத்தார் இதனை The little clay cart என்ற பெயரில் வெளியிட்டுள்ளனர். பிரெஞ்சு, ஜர்மனிய, ரஷிய மொழிகளிலும் இந்நூல் பெயர்க்கப்பட்டுள்ளது. நியூயார்க்கில் பலமுறை இந்த நாடகம் அரங்குகளில் நடிக்கப்பட்டிருக்கிறது. சென்ற ஆண்டில் ரஷியாவிலும் இது நடிக்கப்பட்டது. இன்னும் நமக்குத் தெரியாமல் வேறு சில நாடுகளிலும் நடிக்கப்பட்டிருக்கலாம். இவையெல்லாம் இந்த நாடகத்தின் ஏற்றத்தையே எடுத்துக் காட்டுகின்றன.

தமிழில் இந்நூலின் மொழி பெயர்ப்பாக வேறு ஓரி ரண்டு நூல்கள் உள்ளன. அவற்றுள் மகாமகோபாத் யாய, பண்டித மணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் மொழிக்கு மொழி தமிழில் பெயர்த்து எழுதி வெளியிட்ட மண்ணியல் சிறுதேர் அறிஞர்களால் போற்றப் படுவதாகும். எனினும் நாடக மேடையில் அதனை அப்படியே பின் பற்றிப் பேசி, பிறர் ரஸிக்கும்படி நடிக்க இயலாது என் பதை நாடகக்கலை வல்லுநர் உணர்வர். ஆதலின் இன்று நாடக மேடையில் அப்படியே ஏற்று நடிக்கத்தக்க முறையில் இந்நூல் எழுதப் பட்டிருக்கிறது. இயன்ற வரை முதனூலாசிரியரின் சம்பாஷணைகளையும், சுலோகக் கருத்துக்களையும் அப்படி அப்படியே அந்த அந்த இடங் களில் அமைத்திருக்கிறோம்; பொருத்தமான பாட்டுக்களும் சேர்த்திருக்கிறோம். நாடகம் தாமதமின்றித் தொடர்ந்து செல்ல ஆங்காங்குக் காட்சியமைப்புக்களை முதனூலா சிரியர் அமைத்துள்ள முறையிலிருந்து இன்றியமையாத இடங்களில் கொஞ்சம் மாற்றியும், புதிதாகச் சேர்க்க வேண்டிய இடங்களில் சிறிதளவு சேர்த்தும், இன்றைய அரங்கிற்கு ஏற்றபடி அமைத்திருக்கிறோம். இரண்டு முறை நடித்தும் பார்த்திருக்கிறோம்.

நாடகத்துறை தமிழகத்தில் இப்போது நல்ல ஆதரவு பெற்று வளர்ந்து கொண்டிருக்கிறது. பொது மக்களும், அரசாங்கமும் இதனை வளர்ப்பதில் பேரூக்கம் காட்டி வருகின்றனர். ரேடியோ நிலையங்களும், அமெச்சூர் குழுக் களும், நாடக மன்றங்களும் பல நாடகங்களை நடித்து மக் களை மகிழ்வித்துக் கொண்டிருக்கின்றன. கிராமங்களிலும், நகரங்களிலும் திறந்த வெளி அரங்குகள் மின்சாரம் முதலிய பல வசதிகளோடு நவீன முறையில் கட்டப்படு கின்றன. இவற்றைக் காணும்போது இதுவரை மங்கிக் கிடந்த நாடகத்தமிழ் புத்துயிர் பெற்று, காண்போர் கண்

குளிரத் தளிர்த்துக் கொண்டிருக்கிறது என்று கூறலாம். அந்தத் தளிரில் ஒன்ருக இந்த நாடகம் ஒளிரும் என்று நம்புகிருேம்.

வடமொழியறியாத வயதுவந்தவர்களும் மாணவர்களும் படித்து ஓரளவு வடமொழி நாடகச்சுவையை ரஸிக்க இந்நூல் உதவுமென்று நம்புகிருேம்.

**15—2—57**

**எச். வைத்தியநாதன்**
**பி. ஹநுமந்தராவ்**

# பாத்திரங்கள்

## ஆடவர்

**சாருதத்தன் :** கதாநாயகன் ; அந்தணன் ; ஒருகாலத்தில் பணக்காரனாயிருந்தவன்.

**மைத்திரேயன் :** சாருதத்தனின் நண்பன் ; விதூஷகன்.

**பாலகன் :** உஜ்ஜயினியை ஆண்ட கொடுங்கோல் மன்னன்.

**மதிவாணன் :** பாலகனின் நல்லமைச்சன்.

**ஆனந்தன் :** பாலகனின் தீய மந்திரி.

**சகாரன் :** பாலகனின் ஆசை நாயகியின் சகோதரன்; கொடியவன்.

**விடன்:** சகாரனின் தோழன் ; ஆயினும் சகாரனை வெறுப்பவன்.

**ஸம்வாஹகன் :** உடம்பில் ஏற்படும் வலி, சுளுக்கு முதலியவற்றை நீக்குவதில் நிபுணன் ; சூதாடிப் பிழைத்துப் பின்னர் துறவு பூண்டவன்.

**மாதுரன் :** மதுரையிலிருந்து வந்தவன்
**தியூதகரன் :** ... ... ...
**தர்த்துரகன் அல்லது சபிகன் ;**
} சூதாடுவோர்

**ஆரியகன் :** பாலகனால் சிறைப்படுத்தப்பட்டு பின்னர் அரசினைக் கைப்பற்றிக் கொண்டவன்.

**சர்விலகன் :** ஆரியகனின் நண்பன் ; அந்தணன்; படித்தவன் ; களவு நூலைக் கற்று, திருட்டுத் தொழிலை மேற்கொண்டவன் ; புரட்சியை நடத்தி, புது ராஜ்ஜியத்தை ஸ்தாபித்தவன்.

**வர்த்தமானகன் :** சாருதத்தனுடைய வேலையாள்.

**ஸ்தாவரகன் :** சகாரனுடைய பணியாள்.

**சந்தனகன் :**
**வீரகன் :**
} எல்லைக் காவலர்.

**நியாயாதிபதி :** நீதி சபைத் தலைவர்.

**சிரேஷ்டி :** நீதிபதியின் ஆலோசகர்

**காயஸ்தன் :** கணக்கு வல்லுநர் ; ஆலோசகர்.

**சோதனகன் :** நீதிமன்றத்து வேலையாள்.

**ரோஹசேனன் :** சாருதத்தனின் புதல்வன் ; சிறுவன்.

**கேட்டை :**<br>**மூட்டை :** } கொலையாளிகள்.

மற்றும்

**துதி பாடகர், படைவீரர், சேவகர் முதலானோர்**

★

## பெண்கள்

**வசந்தசேனை :** கதாநாயகி ; சாருதத்தனின் காதலி.

**மதனிகை :** வசந்தசேனையின் தோழி, சர்விலகனின் காதலி.

**தூதை :** சாருதத்தனின் மனைவி [அரங்கில் தோன்றுவதில்லை]

**ரதனிகை :** தூதையின் தோழி.

**கிழவி :** வசந்தசேனையின் தாயார்.

மற்றும்

**மங்கலப் பெண்டிர், சேடியர் முதலியோர்**

★

**நிகழிடம் :** உஜ்ஜயினியில் வசந்தசேனையின் மாளிகை, அரண்மனை, ஒரு பாழுங் கோயில், சூதாடுமிடம், ராஜ வீதி, உத்தியான வனம், எல்லைப்புறம், கொலைக் களம் முதலியன.

★

**முதனூல் ஆசிரியர் :** மஹாகவி, மன்னன் சூத்ரகர்




# இன்பப் புரட்சி

## காட்சி—1

*[உஜ்ஜயினி நகரத்தில் தர்பார் மண்டபம்; அரசன் பாலகன் பிரவேசித்து ஆசனத்தில் அமர்கிருன். அனை வரும் வணங்கி, தத்தம் ஆசனங்களில் உட்காரு கின்றனர்.]*

துதி பாடகர் : உஜ்ஜயினி உயர் வேந்தன் வாழ்க! மன்னர் மன்னன் பாலகன் பல்லாண்டு வாழ்க!

*[பாடுகின்றனர்]*

நாட்டுக் கதிபர் இவரே காண்!
நஞ்செனும் மொழியால் வெஞ்சினம் பொழியும் (நாட்)

நரவுல கெதனிலும் பரவிய பயமிகு (நாட்)
நற்றவ மற்றிடு வெற்றி யியற்றிடும் (நாட்)

ஆட்டுக் குட்டிகட் கொருபுலி போலே
ஆட்டிவைப் பார்இவர் குடிகளை; மேலே
நீட்டிவிட்டால் தலை கிள்ளுவர்; புகழ்பொன்
ஏட்டினில் ஏறிடும் ஏற்ற மமைந்த (நாட்)

**பாலகன் :** (நகைத்து) மிக மிக நன்றாயிருக்கிறது; அமைச்சரே! ஆனந்தரே! ஸ்தோத்திர பாடகர்கள் இன்று பாடிய இந்தப் புதுமைப் பாடல்..........

**ஆனந்தன் :** அடாடா! அழகாகக் கூறிவிட்டார்கள்; புலியின் திட்டத்தை ஆட்டுக்குட்டி மீற முடியுமா? தங்கள் சட்டத்தை இந்தக் குடிகள் என்னும் கோழைக் கும்பல் மீற முடியுமா! சுயநலமே நமது குறிக்கோள்; சர்வாதிகாரமே நமது சாதனை!

**பால :** முற்றிலும் உண்மை! என் மந்திரி மதிவாணர் மௌனமாகவே இருக்கிறார்?

**ஆனந் :** மறுத்துக் கூற முடியாமையால்....என்ன மதி வாணரே! அப்படித்தானே?

**மதிவாணர் :** இல்லை; மனத்தை ஒளித்துக் கூற முடியாமையால். ஆனந்தரே!....அரசே! குடிகள் இல்லையேல் கொற்றவன் இல்லை; நாம் அவர்கள் அன்பின் நிழலில் வாழ வேண்டியவர்கள்.

**பா :** நிறுத்தும்; அன்பாம்! நிழலாம்! உலகமனைத்தும் நம் முடைய ஒரு குடையின்கீழ் - இந்த உஜ்ஜயினிபுர உயர் அரசாட்சியின் கீழ்-வாழுகின்றன; உணர்ந்துகொள்ளும்.

**மதி :** அது உண்மையே! ஆயினும் குடி உயரின் அன்றோ கோன் உயர்வான்? நல்லோரைப் பகைப்பதும், தீயோரை நேசிப்பதும் நம் அரசாட்சியின் நேர்மைக்கு இழுக் கன்றோ?

**ஆனந் :** மதிவாணரே! நன்மை தீமைகள், பாவ புண்ணி யங்கள் இவை யாவும் மனிதர்களை ஏமாற்றப் பிறந்த மாயச் சொற்கள். மறந்துவிடும் அவற்றை!

பா : சரியான வார்த்தை!

ஆனந் : மனிதப் பிறவியின் பயன் என்ன? உண்பது; உடுப்பது; அல்லும் பகலும் ஆனந்த ஸாம்ராஜ்யத்தில் திளைப்பது.......

பா : சபாஷ்! சபாஷ்! ஆனந்தரே! இந்தக் கொள்கை நமது நாடெங்கும் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறதா?

ஆனந் : சந்தேகமுண்டா?

மதி : சகாரன் ஒருவன் போதுமே உதாரணத்திற்கு!

பா (சினமுற்று) மதிவாணரே! பல நாட்களாகக் கவனிக்கிறேன்; நீர் அடிக்கடி நமது சகாரனைப் பற்றித் தாழ்வாகப் பேசத் தொடங்கி யிருக்கிறீர்.

மதி : மன்னிக்க வேண்டும் மன்னா! அரசனை நல் வழியில் திருப்ப முயல வேண்டியது அமைச்சனின் கடமை. தாங்கள் இனியும் சகாரனுடைய தீச்செயல்களுக்கு இடங் கொடுத்தால் விரைவில் நமது அரசு கவிழ்ந்து விடும்.

பா : (கோபத்தோடு) மதிவாணரே!

மதி : ஆம் அரசே!

ஆனந் : சகாரன் சாமானியன் அல்ல! தெரிந்து கொள்ளும்!

மதி : அதைத்தான் சொல்லுகிறேன்; வஞ்சனை உள்ளம் படைத்த கோழை; வாள் ஏந்தத் தெரியாத வீரன்; கல்லாத கவி; வேந்தே! சகாரன் தங்கள் ஆசைநாயகியின் தம்பி என்பதனாலேயே உலகம் அவனை உயர்வானவன் என்று ஒப்புக்கொள்ளாது.

**பா :** மதிவாணரே ! உலகம் ஒப்புக்கொள்ள வேண்டாம் ; நம் உள்ளம் ஒப்புக்கொள்ளுகிறது ; நீர் சும்மா இரும். சகாரனைத் தூஷிப்பதற்காக உம்மை நாம் இங்கே மந்திரியாக அமர்த்தவில்லை........

[சகாரன் பரபரப்புடன் வருகிறான்]

**சகாரன் :** அரசே! அரசே! ஒரு விஷயம்! பெரிய விஷயம்!

**ஆனந் :** வருக சகாரா வருக! நினைக்கும்போதே வந்து விட்டீர் ; நீடூழி வாழ்க நீர் !

**சகா :** வாழ்வது இருக்கட்டும் ; விஷயத்தைக் கேள் ஐயா !

**பா :** சொல்லப்பா சொல் !

**சகா :** நான் வழியிலே நிமிர்ந்த நடை போட்டு நேராகப் போய்க்கொண்டிருந்தேன் ; எதிரே ஒரு பெண் வந்தாள், ஐயா ! எப்படி? தாடகையைப் போல ஒய்யாரமாக வந்தாள். நான் சும்மா இருப்பேனா? திரௌபதியை ராவணன் தூக்கின மாதிரித் தூக்கினேன். அவள் என்ன செய்தாள் தெரியுமா ! 'குய்யோ முறையோ' என்று கத்தினாள். நான் அவள் வாயைப் பொத்தினேன் ; உடனே அவள் என்னிடமிருந்து திமிறிக்கொண்டு என்னை உதை உதை என்று........

[திரையில் பாட்டுக் குரல் கேட்கிறது.]

**பா:** இரு; எங்கிருந்து பாட்டுக் குரல்? சகாரா ! யாரவன் தெருவில் பாடுவது........? பார்த்துவா !

[சகாரன் போய் ஒரு தபோதனரை இழுத்து வருகிறான்]

**சகா :** உம்....இப்போது பாடு ! அரசர் கேட்கட்டும்.

தபோதனர்:—(பாடல்)

தீவினைக் கடலில் நீந்துவதாலே
சிறுமைகள் சூழும் மேன்மேலே ;
பூவினை ஆளும் புண்ணியம் முடிந்தால்
புன்மை சுமப்பாய் சிர மேலே!

பா : நிறுத்து!

சகா: நிறுத்து! இவர் யார் தெரியுமா? மாட்சிமை பொருந்திய மகாராஜா பாலகர்! இவர் எதிரிலே நீ பாட்டுப் பாடலாமா ?

பா : பரதேசிப் பயல்! ஏனடா! இந்த அரண்மனைப் பக்கம் மூச்சுக்கூட விடக்கூடாது என்பது உனக்குத் தெரியாது ?

தபோ : மூச்சு விடக்கூடாதா ? மூச்சுதான் அப்பனே உலகத்தின் மூலாதாரம் ! ஏன் இறுமாந்திருக்கிறாய் ? இப்பவோ பின்னேயோ சற்று நேரத்திலோ....

பா : என்னடா ?

தபோ : உனக்கு வீழ்ச்சி அப்பனே ! தெளிவாகத் தெரிய வேண்டுமா ? சொல்கிறேன் கேள்! இந்த நாட்டில் ஜன நாயக ஆட்சி ஏற்பட்டு ஆரியகன் என்பவன் அரசாளப் போகிறான்.

பா : (பதறி) எந்த ஆரியகன் ? அந்த இடையனா ?

தபோ : ஜாதி எதுவானால் என்ன கொற்றவா ? நீதி வேண்டும்....

பா : மூடு வாயை ! ஆனந்தரே ! அனுப்பும் வீரரை! ஆரியகனை உடனே சிறைப்படுத்த வேண்டும்....

சகா : முதலில் இந்தத் தாடிப்பயலைத் தள்ள வேண்டும் உள்ளே !

ஆனந் : ஆமாம்! அடேய்! யாரங்கே!

சகா : பிடி! பிடி இவனை!

[வீரர் வருவதற்குள் தவசி மறைந்து விடுகிறார்]

சகா : அடேய்! அடேய்! ஓடி விட்டானே! இதோ— நானும் ஓடுகிறேன்....(ஓடுகிறான்)

## காட்சி—2

ராஜ வீதி:—சகாரனும் ஒரு வழிப் போக்கனும் எதிர் எதிரே வந்து முட்டிக் கொள்ளுகின்றனர்.

சகா : யாரடா அவன்? மூளையிலே தலையில்லாதவன் போல முட்டிக் கொள்கிறாயே—முட்டாள்!

வழிப்போக்கன் : ஆமாம் ஐயா! நான் முட்டாள்தான்! அதாவது இலக்கண விதிப்படி முட்டிக்கொள்ளும் ஆள்!

சகா : என்ன என்ன? அடேய்! என்னிடமா இலக்கணம் பேசுகிறாய்? விநாயகர் எழுதின சுருக்கெழுத்து முதல் அநுமார் கொளுத்தின சுட்டெழுத்து வரையில் படித்திருக்கிறேன் நான்! அதிருக்கட்டும்; எங்கிருந்து வருகிறாய் இவ்வளவு அவசரமாக?

வழிப் : நானா? சாருதத்தர் வீட்டிலிருந்து வருகிறேன்.

சகா : சாருதத்தன்? ஓ! அந்த தரித்திரப் பயலா? அவன் வீட்டிலே என்ன? ஏதாவது பட்டினிப் பண்டிகையா?

வழிப் : சகாரா! அவர் நிலைமை தரித்திரமாகி விட்டதே யன்றி அவர் மனம் தரித்திரம் அடையவில்லை; தெரிந்து கொள்.

சகா : ஓ, அப்படியானால் ஏதாவது கிடைத்ததா தட்சிணை ?

வழிப் : கிடைக்கப் போகிறது; இன்றைக்கு மன்மதன் பிறந்த நாள் அல்லவா ? காமதேவன் தோட்டத்திலே பூஜை செய்யச் சாருதத்தரும் வரப் போகிறார்; அங்கே நான் போனால் கட்டாயம் ஏதாவது கொடுப்பார்.

சகா : ஓஓ! இன்றைக்கு மன்மதன் பிறந்த நாளா? மறந்தே போனேனே! நான் அங்கே போகவேண்டும்; விடு; வழி விடு. [ஓடுகிறான்]

## காட்சி—3

**காமதேவன் தோட்டம்]** **[காலம் : மாலை**

*[உயரிய மேடையில் மன்மத விக்கிரகம் காணப் படுகிறது; ஆடவரும் பெண்டிரும் திரள் திரளாக வந்து வணங்கிச் செல்கின்றனர். வசந்தசேனையும் மத னிகையும் பூஜைக்குரிய பொருள்களுடன் வருகிறார் கள்; வசந்தசேனை பூஜை செய்து பாடுகிறாள்.]*

வசந்தசேனை : (பாட்டு)

**நீ யருள் மாரா நிஜ உள்ளம்**
**பே ரிருள் மாயையில் மனம் உழலாமல் (நீ)**
**தீயஎன் குலத்தின் தொழில் வெறுத்திடவும்,**
**சீரியன் ஒருவன் தனை மணந்திடவும்,**
**பேயினைப் போன்று பணங் காவாமல்**
**பெண்மையைப் போற்றிக் கற்பனைக் காக்கவும் (நீ)**

வசந் : மதனிகே! இதோ பார்! என் இடதுதோள் துடிக்கிறது!

மதனிகை : மன்மத தேவன் அருளம்மா! அவன் மலர்க் கணை தொடுக்கக் காலம் வந்ததாக்கும்!

வசந் : மதனிகே! உணராமல் பேசுகிறாய்; மலர்க்கணை என் மனத்தை தீண்டாதடி! இந்தத் தாசிகளின் தீவினை யால் நான் சிருஷ்டியையே வெறுக்கிறேன்.

மத : தவறு அம்மணி! தாசித் தொழிலை வெறுப்பது சரியே! ஆயின் குலமடந்தையாகி நல்லறம் நடத்துவது தங்கள் கடமை அம்மா!

வசந் : [தொலைவில் பார்த்து] யாரடி அவர்? அதோ பார்!

மத : [பார்த்து] ஓ, அவரேதான்! அவரேதான்!

வசந் : யார்?

மத : கண்ணால் காண்பதற்கு முன்பாகவே பெயரைக் கேட்டு அவர் பேரில் காதல் கொண்டு விட்டீர்களே— இன்னும் தெரியவில்லையா? சாருதத்தர் அம்மா!

வசந் : (மகிழ்ந்து) என்ன? அந்த உத்தமரா?

மத : ஒரு காலத்தில்!

வசந் : ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? அவர் கருணை புத்தரின் புகழையும் தோற்கடிக்கிறதே!

மத : பணமில்லாதவரிடம் கருணையிருந்து பயன் இல்லை.

வசந் : பணம் இல்லையா? வேண்டாமே! நட்பும் தயையும் கொடையும் அவரை விட்டு எந்நாளும் நீங்காச் செல்வங் கள்; அவை போதும்! அவருடைய நற்குணங்களைக்

கேட்டு நெடுநாட்களாக அவரைக் காண வேண்டுமென்று காத்திருந்தேன் ; இன்றைக்குத்தான் அந்தப் பாக்கியம் கிடைத்தது. இதோ — இந்த மன்மத தேவன் சந்நிதியில் கூறுகிறேன் ; என் திரண்ட செல்வம்; என் பேரழகு; என் உள்ளன்பு ; இவை யாவும் சாருதத்தருக்கே உரிமை! இது சத்தியம் !

[சாருதத்தன் பின்புறமாக வந்து மறைந்து நின்று வசந்தசேனையும் மதனிகையும் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிறான்]

**வசந் :** (சுற்றும் பார்த்து) எங்கடி அவர் ?

**மத :** காணவில்லையே! காதல் பேச்சு கண்ணை மறைத்து விட்டதே! இங்கேயே இருங்கள் ; நான் போய்த் தேடிப் பார்க்கிறேன். (போகிறாள்)

**சாருதத்தன் :** (வசந்தசேனையின் எதிரில் வந்து) வசந்த சேனே ! மறைந்து நின்று அனைத்தையும் கேட்டேன்; என்னை மன்னிப்பாயா ?

**வசந் :** (வணங்கி) நான் மன்னிப்பதா? ஆண்டவனை மன்னிப்பது அடிமையா ?

**சாரு :** நான் ஏழை வசந்தசேனா!

**வசந் :** தங்கள் உள்ளம் ஏழ்மையானதல்ல; அது கடலை விட விசாலமானது. ஸ்வாமீ! இந்த அடியாள் இனி எந்நாளும் தங்கள் உடைமை! ஏற்றுக்கொள்ள வேண்டும்.

[காலைத் தொட்டு வணங்குகிறாள் ; சகாரன் வந்து மறைவில் நின்று கவனிக்கிறான்]

சாரு: வசந்தசேனே! (கைலாகு கொடுத்து எழுப்பி) எழுந்திரு; நான் மகா ப்ராக்கியசாலி!........நம் சந்திப்புக்குக் காரணமாயிருந்து நம்மைப் பிணைத்து வைத்த மன்மத தேவனைப் பாடித் தொழுவோம், வா!

இருவரும்: (பாட்டு)

**மன்மதனே! உனைப் போல் உபகாரி—இம்**
**மண்மேல் ஒருவ ருண்டோ**
**கன் மர விலங்கும் நன்மையில் வாழ**
**காதலை ஊட்டும் சீதரன் மகனே......... (மன்)**
**உன் அருள் இலையேல் பொன் பொருளாலே**
**உலகில் சுகமேது**
**கன்னலும் தேனும் கலந்தது போலே**
**கருத்து கலந்தோம் உன் கருணையினாலே (மன்)**

சாரு: வசந்தசேனே! என் வாழ்வை வளமாக்கிய இந்த நல்ல நாளை நான் மறக்கவே மாட்டேன்.

வசந்: அத்துடன் இந்த வசந்தசேனையையும் மறக்க வேண்டாம்.

சாரு: உன்னை மறப்பதா? கனவிலும் முடியாது!... சந்தியாகால மாகிறது; போய் வருகிறேன்.

வசந்: மீண்டும் எப்பொழுது?

சாரு: காமதேவன் கருணையினால் விரைவில் சந்திப்போம்.
[போகிறான்; மதனிகை வருகிறாள்]

மத: இல்லவே இல்லை அம்மா! எங்கோ மாயமாகி விட்டார்; தேடித் தேடிப் பார்த்தேன்! காணவே இல்லை.

வசந்: இல்லாத இடத்தில் தேடினால் எப்படிக் காண முடியும்? சரி! நாம் போகலாமா?

மத: ஆமாம் அம்மா! இருட்டும் சமயம் ஆகிவிட்டது; புறப்படுங்கள்.

[போகிறார்கள்; மதனிகை தான் கொண்டு வந்த புஷ்பக் குடலையை மறந்து அங்கேயே விட்டுச் செல்கிறாள்; அவர்கள் போன பின்பு, சகாரன் விடனுடன் வருகிறான்]

சகா: அடேய்! கேட்டாயா?

விடன்: கேட்டேன்; பார்த்தேன்; அதனால் உனக்கென்ன?

சகா: எனக்கென்னவா? உம்....வா சீக்கிரம்! அவளைப் பிடிக்க வேண்டும்.

விடன்: பிடிப்பதா? வசந்தசேனையுடன் தோழி ஒருத்தி இருக்கிறாள்—தெரியுமா?

சகா: அவள்தானே—மதனிகை! இதோ பார் புஷ்பக் குடலை! மறந்து இங்கேயே வைத்துப் போய்விட்டாள்! அதோ பார்! இதை எடுத்துப் போக வந்துகொண்டிருக்கிறாள். வா வா! சீக்கிரம்! போய் வசந்தசேனையை மடக்க வேண்டும். (இருவரும் விரைந்து போகிறார்கள்).

[அவர்கள் போனபின்பு மதனிகை மெல்ல வந்து புஷ்பக் குடலையை எடுக்கிறாள்; புதர் மறைவிலிருந்து சர்விலகன் தோன்றி மதனிகையின் கண்களைப் பொத்துகிறான்; மதனிகை ஆவெனக் கத்துகிறாள். சர்விலகன் பயந்து விலகி நிற்கிறான்; மதனிகை அவனைப் பார்த்து மகிழ்ச்சி யுறுகிறாள்]

மத : ஆ! நீங்களா? பயந்து விட்டேனே! முன்னெச்ச ரிக்கை இல்லாமல் திடீரென வந்து கண்ணைப் பொத்தினால்....

சர் : கள்வன் எச்சரித்து விட்டா வருவான்?

மத : பொருளைக் கவர்பவன் அப்படி! உள்ளத்தைக் கவர்ந்தவன் அல்ல.

சர் : நான் இப்போது பொருளைக் கவரவும் தொடங்கி விட்டேன் மதனிகே!

மத : அப்படி யென்றால்?

சர் : வேறென்ன? இன்னும் இரண்டே நாளில் உன்னை அழைத்துக் கொள்ளுகிறேன்.

மத : எப்படி முடியும்? நானோ வசந்தசேனைக்கு அடிமை! நீங்களோ ஏழைமைக்கு அடிமை! உங்களால் என்னை எப்படி அழைத்துக்கொள்ள முடியும்? வசந்தசேனைக்கு ஆயிரம் பொன் கொடுத்தால் அல்லவோ என் அடிமைத் தனை நீங்கும்! வறுமைக்கு வாழ்வையே உரிமையாக்கிய நீங்கள் என் சுதந்திரத்தைப் பற்றிக் கனவிலாவது கருத முடியுமா?

சர் : (சிரித்து) மதனிகே! நான் சொன்னது இன்னும் புரியவில்லையா? நான் இப்போது ஏழையல்ல; பெரிய பணக்காரன்; ஊரார் பொருள் எல்லாம் என் பொருளே தான்! ஒரே விநாடியில் லட்சம் பொன் வேண்டுமானாலும் என்னால் தர முடியும்! தெரிந்துகொள்.

மத : அப்படியா? உங்களுக்கு எப்பொழுது இவ்வளவு செல்வம் வந்தது?

சர் : கொஞ்ச நாட்களாகத்தான் !

மத : ஏதாவது தொழில் ஆரம்பித்தீர்களா?

சர் : ஆமாம்; தொடங்கியதிலிருந்தே நல்ல வருமானம்!

மத : அவ்வளவு பணத்தையும் இப்போது எங்கே வைத்திருக்கிறீர்கள் ?

சர் : அவரவர் வீடுகளில்! தேவை ஏற்பட்டால், அவர்கள் அநுமதியில்லாமலேயே எடுத்து வருவேன்.

மத : ஆகா! அது என்ன வியாபாரமோ?

சர் : முதலில்லாத வியாபாரம்! அதாவது—தி...ருட்....டுத்....தொ....ழில் !

மத : (பதறி) ஆ—திருடுவதா !

சர் : ஏன் பயப்படுகிறாய்? மற்றவர் திருடுவதற்கும் நான் களவாடுவதற்கும் மிகுந்த வித்தியாசம் உண்டு.

மத : (கோபமாக) போதும்! களவாடுவதில் வித்தியாசமும் வேதாந்தமும் வேறா? ஐயோ! வேண்டாம்! அதை மறந்து விடுங்கள் !

சர் : மதனிகே! பதற்றமில்லாமல் கேள்! திருடும் தொழில் எனக்கு நிரந்தரமான உத்தியோகம் ஆகிவிடாது. உன்னை அடைவதற்காக மட்டுமே நான் அதை ஆசிரயித்திருக்கிறேன்; மேலும், எப்படித் தெரியுமா? நான் படித்தவன் அல்லவா? ஆதலால், சாஸ்திரோக்தமாகத்தான் திருடுவேன்.

மத : ஆ! களவு புரிய சாஸ்திரம் வேறு இருக்கிறதா!

சர் : சந்தேகமென்ன? அதனை முழுமையும் கற்று உணர்ந்து அதன்படியே நடக்கும் நல்ல திருடன் நான்! பயந்தவனிடத்தில் போகமாட்டேன்; தூங்குகிறவனைத்

தொந்தரவு செய்யமாட்டேன்; குருவை மறக்கமாட்டேன்; மந்திரத்தை விடமாட்டேன்; பொதுவாக இந்தத் தொழிலை மனிதர் தாழ்வாகப் பேசுவர்; ஆனால் உண்மையில் இது தாழ்வானதல்ல; நம்பினவர்களை வஞ்சித்து அவமானம் செய்வதுதான் தாழ்வு! தீங்கு! அது வீரமல்ல!........திருடுவது இகழை ஏற்பதாயினும் அது சுதந்திரத் தொழில்; பிறருக்குக் கைகட்டி நிற்க வேண்டியதில்லை. அதிகம் சொல்வானேன்! இளம் பஞ்ச பாண்டவரைக் கொல்வதற்காக அசுவத்தாமா இதே வழியைத் தான் பின்பற்றினன்.

மத: தொழிலைவிட அதன் புகழ் நன்றாயிருக்கிறது! ஆனால் யாராவது பார்த்துவிட்டால்? பிடித்துக் கொண்டால்?

சர்: யாரை? என்னையா? இந்தச் சர்விலகனையா பிடிக்க முடியும்? மதனிகே! இவ்வளவுதானா நீ என்னை அறிந்து கொண்டது? நான் எப்பேர்ப்பட்டவன் தெரியுமா? மெதுவாக நடப்பதில் பூனை; ஓடுவதில் மான்; வீட்டிலுள்ள பொருள்களை அறிவதில் கழுகு; ஒருவன் தூங்கினாலும் சரி, விழித்திருந்தாலும் சரி—அவனுடைய மனத்தை அறிவதில் தாய்; ஊர்ந்து செல்வதில் பாம்பு; உருவம் மாறுவதில் மாயை; இரவிலே தீபம்; பூமியில் குதிரை; தேச பாஷைகள் பேசுவதில் வாக்தேவி; நீரில் படகு; போக்கில் பாம்பு; நிலைத்திருப்பதில் மயில்; பறப்பதில் கருடன்; தரையை ஆராய்வதில் முயல்; பிடிப்பில் செந்நாய்; குகையில் சிங்கம். தெரிந்ததா?....கண்ணே! மதனிகே! உன்பேரில் ஏற்பட்ட காதல் உன்னை அடைவதற்காக—உன் அடிமைத் தனத்தை நீக்குவதற்காக—என்னை இந்தத் தொழிலில் இறக்கிவிட்டது.

**மத :** ஐயோ! அநியாயமே! எனக்காக இந்தத் தவருன வழியில் இறங்கி விட்டீர்களே!....ஆனுல்....இதனுலாவது எனக்கு விடுதலை கிடைக்குமா?

**சர் :** இன்னுமா சந்தேகம்? இந்தச் சர்விலகன் நம்பினவர்களை ஒரு போதும் கைவிடமாட்டான்; கவலையே வேண்டாம்.

**மத :** நல்லது; நான் போய் வருகிறேன்; வசந்தசேனை சென்று வெகுநேரம் ஆகிவிட்டது.

**சர் :** சரி போ! நான் இன்னும் இரண்டே நாட்களில் பணத்தோடு வருகிறேன்.

[போகிருர்கள்]

## காட்சி—4

[ராஜவீதி :—ஒருபுறத்திலிருந்து மைத்திரேயனும், மற்ருெரு பக்கம் ஓர் அந்தணனும் வந்து சந்திக்கிருர்கள்.]

**அந்தணன் :** சுவாமீ! எங்கள் அகத்தில் இன்று ஒரு விசேஷம்! தாங்கள் வந்து கிருபை செய்யணும்.

**மைத்திரேயன் :** மன்னிக்க வேண்டும். எனக்கு வேறு ஒரு அவசர ஜோலி இருக்கிறது. வேறு யாரையாவது பார்த்துக் கொள்ளுங்கள்.

**அந் :** அட மனுஷா! (கையைக் காட்டி) தக்ஷிணைகூட உண்டு ஐயா!

**மைத் :** சந்தோஷம்! நான் தான் சொல்லி விட்டேனே!

**அந் :** சரி! உமக்கு யோகமில்லை; யாரையாவது தேடிப் பிடிக்கிறேன். [போகிருன்]

**மைத் :** (வருத்தத்தோடு) ஐயோ! கஷ்டம்! அன்னியன் வீட்டில் போய்ச் சாப்பிட வேண்டிய கதி எனக்குக்கூட ஏற்பட்டு விட்டதே! நான் என்ன—லேசுப்பட்டவனு? கோடீசுவரப் பிரபுவாக இருந்த சாருதத்தரின் உயிர்த் தோழன் அல்லவா? அந்த வள்ளல் வீட்டின் மடைப் பள்ளியிலே நுழைந்தால் அடாடாடா—கமகமவென்று எத்தனை வித பட்சணங்கள்—எவ்வளவு பழ தினிசுகள்—எல்லாவற்றையும், காணுததைக் கண்டவன் போல அவசரப்படுவேனு? ஊஹூம்! ஒவ்வொன்ருக எடுத்து, நூறு தூரிகை வைத்துக் கொண்டிருக்கிற சித்திரக் காரன் மாதிரி தொட்டுத் தொட்டுச் சுவைப்பேன்! அப் புறம் கோயில் காளையைப் போல ஆர அமர அசை போடுவேன்! அப்படிப்பட்ட நான்—இன்றைக்கு, எவன் வீட்டிலே நல்ல சாப்பாடு கிடைக்கும் என்று கழுகு மாதிரி பார்த்திருக்க வேண்டிய கஷ்ட காலம் வாய்த்து விட்டதே!

(நினைவிற்கு வந்து) அடடா! விஷயத்தை மறந்து விட்டேனே!

(ஒரு சால்வையை எடுத்துப் பிரித்து) இந்தச் சால்வையைச் சாருதத்தரிடத்திலே சேர்ப்பிக்கும்படி ஜீரணவிருத்தன் கொடுத்தனுப்பினுனே! ஓஹோஹோ! நாழிகை ஆகி விட்டது........

[போகிருன்; அதற்குள், மற்ெருரு புறமாக வசந்தசேனையும், அவளைத் துரத்திக்கொண்டு சகாரனும் விடனும் ஓடி வருகிருர்கள்]

சகா : பிடி ! பிடி !

[ஒருபுறம் சகாரனும் மறுபக்கம் விடனும் வசந்தசேனையை மறித்து நிற்கின்றனர்.]

விடன் : (பாட்டு)

> **"வேடன் தொடர் மானைப் போல**
> **ஓடும் பெண்ணே நில்லு...**
> **பாடகம் இரங்க வீணாய்ப்**
> **பதற்றம் ஏனோ சொல்லு...**

சகா :

> **தீயிலிட்ட இறைச்சி போலே**
> **கிளு கிளுக்கும் நெஞ்சம்...**
> **பாயும் இந்த மோகத்தாலே..."**

(விடனைப் பார்த்து) அடேய்! பாட்டு வரலியே! அப்புறம் என்னடா ?

விடன் : அப்புறமா ?

(பாட்டு)

> **"பாயும் இந்த மோகத்தாலே**
> **நாய் போல் வந்தோம் கெஞ்சி"**

(வசந்தசேனையை அணுகி)

வசந்தசேனே ! வீணாக ஏன் ஓடுகிறாய்? நாங்கள் முயலைக் கூடப் பிடித்து விடுவோமே ; உன்னைப் பிடிக்கமாட்டோமா?

சகா : வசந்தசேனே ! ராமனைப் பார்த்து திரௌபதி ஓடின மாதிரி நீ ஓடினால்—ஹநுமார் சுபத்திரையைத் தூக்கியதுபோல, உன்னைத் தூக்கிக்கொண்டு போய் விடுவேன்.

**வசந் :** (கூவுகிறாள்) ஆ! மாலதீ! மல்லிகா! கோகிலா!

**சகா :** (யாரோ வருவதாக எண்ணிப் பயந்து) அடேய்! மனுஷண்டா! மனுஷண்டா! [ஓட யத்தனிக்கிறான்]

**விட :** (சகாரனைத் தடுத்து) சும்மா இருடா! (தன் தோழிகளைக் கூப்பிடுகிறாள்)

**சகா :** (தைரியமாக) ஓ! "தோழிகள்" அதாவது பெண்கள்தானே? நூறு ஸ்த்ரீகள் வரட்டுண்டா! இந்தச் சூரனை என்ன செய்ய முடியும், பார்க்கிறேன்!

**வசந் :** ஐயோ! தோழிகளைக்கூடக் காணோமே! [யோசிக்கிறாள்]

**விட :** சகாரா! இப்போது என்ன செய்யப் போகிறாய்?

**சகா :** நான்தானே! துச்சாதனனைப்போல இவளை இழுத்துச் செல்லப் போகிறேன்.

**வசந் :** ஐயோ! நான் அபலையல்லவா?

**விடன் :** அதனால்தான் இன்னும் உயிரோடு இருக்கிறாய்.

**வசந் :** உங்களுக்கு என்ன வேண்டும்? என் ஆபரணங்களா?

**விடன் :** சேசே! அழகிய கொடியிலிருந்து மலர்களை யாராவது பறிப்பார்களா?

**வசந் :** பின்—எதற்காக என்னை...

**விடன், சகாரன் :** இன்னும் புரியவில்லையா? [ஜாடை காட்டுகிறார்கள்]

**வசந் :** புரிந்ததையா! ஒருவரை நேசிப்பது குணங்களால் அன்றி, பலாத்காரத்தால் அல்லவே! உங்களுக்குத் தெரியாதா?

சகா : தெரியும் தெரியும் ; (விடனைப் பார்த்து) அடேய்! உனக்கும் தெரியுமல்லவா ? இவள் சாருதத்தனைக் காத விக்கிறாள்.

விட : மிகப் பொருத்தம்! ரத்தினத்தை ரத்தினந்தானே சேரும்!

சகா : அந்தச் சாருதத்தன் எங்கே வசிக்கிறான் தெரியுமா ? இதோ! இடது பக்கம் இருக்கிறது அவன் வீடு!

வசந் : (மகிழ்ச்சியோடு) ஆ? இங்கேயா அவர் வீடு ?

விட : ஆமாம்! இடதுபுறமாகப் போய், கொஞ்சம் திரும் பினால் சாருதத்தன் வீடு.

சகா : அடேய்! இவளை அங்கே போகவிடாமல் பார்த்துக் கொள்.

[விடன் வசந்தசேனையை ஓடிவிடும் படி சமிக்ஞை செய்கிறான்; அவள் தப்பிப் போய் விடுகிறாள். நன்றாக இருட்டி விடுகிறது]

விட : சரி! வசந்தசேனே! நீ போ பார்க்கலாம்!

சகா : என்னடா! நீ மட்டும் தனியாகப் பேசிக் கொண் டிருக்கிறாய் ?

[பரபரப்புற்று அருகில் வந்து பார்த்து]

அவள் எங்கே ?

விட : அவள் எங்கே? நீதான் சொல்லேன்!

சகா : அடேய்! அவள் ஓடிவிடுவாள் என்று உன்னைப் பார்த்துக் கொள்ளச் சொல்லவில்லை ?

விட : சொன்னாய் ; நான் பார்த்துக் கொண்டுதானே இருந்தேன் !

சகா : அப்படியானால் தேடு ! தேடு !

விட : உம் தேடு! நீ அவள் போகாத பக்கம் தேடு ; நான் போன பக்கம் தேடுகிறேன்.

[இருவரும் இரண்டு திசைகளில் போகிறார்கள்]

## காட்சி—5

*[சாருதத்தன் வீடு ; சாருதத்தன் ஜபம் செய்து கொண்டு உட்கார்ந்திருக்கிறான் ; மைத்திரேயன் சால்வையுடன் வருகிறான்; இருட்டும் சமயம்]*

**மைத்திரேயன்** : மங்களம் உண்டாகுக !

**சாரு** : சர்வ கால மைத்திரேய! வா ! உட்காரு !

**மைத்** : (உட்கார்ந்து) சாருதத்தா ! ஜீரணவிருத்தன் இந்தச் சால்வையை உன்னிடம் கொடுக்கச் சொன்னான்; இந்தா ! இதோ பார் ! அடையாளமாக இதில் வீசும் ஜாதி புஷ்பத்தின் நறுமணத்தை !

[சாருதத்தன் சால்வையை வாங்கிப் பார்த்து யோசிக்கிறான்]

**மைத்** : என்னப்பா யோசிக்கிறாய் ?

**சாரு** : வேறொன்றுமில்லை ; விளக்கின் அருமை இருட்டிலே தெரிவதுபோல, சுகத்தின் அருமை துக்கங்களை அநுபவிக்கும்போதுதான் நன்றாகத் தெரிகிறது ! முதலில் பணக்காரனாக இருந்து பிறகு தரித்திரன் ஆகிவிட்டால், அவன் இருந்தும் இறந்தவனேதான் !

**மைத் :** சாருதத்தா! உன்னை ஒன்று கேட்கிறேன்; மனித னுக்கு வறுமை பெரிதா ? மரணம் பெரிதா ?

**சாரு :** பெரியது வறுமைதான் ! வறுமைக்குப் பலியா வதைவிட மரணத்துக்கு இரையாவதே நல்லது! ஏன் தெரியுமா! மரணம் என்பது அற்பக் கிலேசம்தான்! வறுமையோ ஓயாத தொல்லையப்பா!

**மைத் :** சாருதத்தா! கலைகளை இழந்த சந்திரனைப்போல, உன் ஏழ்மை நிலையும் உனக்கு ஒரு வகையில் அழகையே கொடுக்கிறது. வீணாக வருந்தாதே!

**சாரு :** மைத்திரேயா! நான் வேறு எதற்காகவும் வருந்த வில்லை; முன்பெல்லாம் அதிதிகளும் யாசகர்களும் திரள் திரளாகத் தேடி வந்த இந்த இல்லம், இப்பொழுது........

**மைத் :** அவர்கள் கிடக்கிறார்கள்; ஆட்டிடையன் பசுமை யைத் தேடிச் செல்வதைப்போல, அவர்கள் பசையைத் தேடிச் செல்பவர்கள்.

**சாரு :** அதைத்தான் சொல்கிறேன்; பணம், அவனவன் புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி வரும் ; போகும்! ஆனால், நன்றியும், நட்பும் கூடவா அப்படி? ஒருவனிடம் பணம் அற்றுப் போனவுடனே அவனை மறந்தே விடு கிறார்களே சிலர் ! இவற்றையெல்லாம் ஆலோசிக்கும் போது துன்பங்களுக்கு மூலகாரணம் தரித்திரந்தான் என்பது நன்றாகத் தெரிகிறதல்லவா ?

**மைத் :** போதுமப்பா ! போன பணத்தைப் பற்றிப் புலம்பாதே!

**சாரு :** புலம்பல் அல்ல மைத்திரேயா ! கொஞ்சம் கேள்; வறுமை வந்துவிட்டால் கூடவே கவலையும் வரும்;

அதனை அவமானம் தொடரும்; நண்பர்களுக்கு வெறுப்புத் தோன்றும்; மனைவியும் மதிக்கமாட்டாள். இவ்வளவையும் எண்ணும்போது என் நெஞ்சம் குமுறுகிறது.... ம்....ம்.... (அன்னத்தை எடுத்து) இந்தா மைத்திரேயா! இந்த அன்னம் தேவதைகளுக்கு நிவேதனம் செய்தது; கொண்டுபோய் நாற்சந்தியில் போட்டு வா!

**மைத் :** நான் போட மாட்டேன்; இந்தத் தெய்வங்களுக்குப் போட்டால் என்ன, போடா விட்டால் என்ன? நீ இப்படியெல்லாம் பூஜை செய்ததற்கு என்ன பலன் கண்டாய்? இந்தத் தரித்திரம்தான்!

**சாரு :** பூஜைக்கும் வறுமைக்கும் சம்பந்தமில்லை; நம் கடமையை நாம் செய்தே ஆகவேண்டும்; இந்தா! பலியை எடுத்துப் போ!

**மைத் :** இன்னும் ஒன்று சாருதத்தா! பலியைக் கொண்டு போகையில் நானே பலியாகி விடுவேனோ என்று பயப்கிறேன்; ஏனென்றால், இது மையிருட்டு வேளை; தாசிகள், ராஜ சிநேகிதர் முதலியோர் ஆட்களைப் பிடிக்கக் காத்து நிற்கும் சமயம்; நான் தெருவிலே போகும்போது அவர்கள் என்னைப் பார்த்துவிட்டால்—தவளையைத் தேடிவந்த பாம்புக்கு எலி கிடைத்ததுபோல் ஆகிவிடும்; தவிர, நான் எந்தக் காரியத்திற்குப் போனாலும் அது விபரீதமாகவே முடிகிறது. ஆகையால் நீயே போய் இந்த அன்னத்தைப் போட்டு வா! அதுதான் சரி.

**சாரு :** எனக்கு இன்னும் ஜபம் முடியவில்லையே; அதனால் தான் உன்னைப் போகச் சொல்லுகிறேன்.

**மைத் :** சரி, போகிறேன்; ஆனால் இந்த ரதனிகையும் என்னுடன் வரவேண்டும்.

சாரு : அதற்கென்ன, அனுப்புகிறேன் ! ரதனிகே ! ரதனிகே !

திரையில் ரதனிகையின் குரல் : இதோ வந்தேன் !

சாரு : ஒரு விளக்கை எடுத்து வா !

[ரதனிகை ஒரு விளக்குடன் வருகிருள்]

சாரு : ரதனிகே ! அந்த விளக்கை எடுத்துக்கொண்டு மைத்திரேயனுடன் போ ! அவன் இந்தப் பலியைத் தெருவில் போட்டு வரட்டும் !

ரதனிகை : அப்படியே!

[மைத்திரேயன் பலியை வாங்கிக் கொண்டு ரதனிகையுடன் கதவருகில் வருகிருன்; பலியை ரதனிகையிடம் நீட்டுகிருன்]

மைத் : ரதனிகே! இந்தப் பலியை வைத்துக்கொள்; நான் கதவைத் திறக்கிறேன்.

[பலியை ரதனிகையிடம் தந்து, கதவைத் திறக்கிருன் ; வசந்தசேனை ரதனிகையின் கையிலுள்ள விளக்கை ஊதி அணைத்துவிட்டு உள்ளே நுழைகிருள்]

சாரு : என்ன மைத்திரேயா? ஏன் விளக்கு அணைந்து விட்டது?

மைத் : கதவைத் திறந்ததும் காற்று புகுந்தது; விளக்கு அணையாமல் இருக்குமா ? ரதனிகே ! ஏன் நிற்கிருய் ? பெண் பிள்ளைக்குப் பயமென்ன ? சும்மா வாசலுக்குப்

போ! நான் போய் வேறொரு விளக்கை ஏற்றி வருகிறேன்.

[மைத்திரேயன் வீட்டின் உட்புறம் செல்கிறான்; ரதனிகை பலியை ஏந்தித் தெருவுக்குப் போகிறாள்]

## காட்சி 6

[சாருதத்தன் வீட்டை யொட்டின வீதி; இருள் கவிந்த நேரம்; சகாரனும் விடனும் வருகிறார்கள்]

**விடன் :** சகாரா! என்ன திடீரென்று கண்களை இருள் மூடிவிட்டது? ஆகாயத்தைப் பார். மழை வரும்போலிருக்கிறது.

**சகா :** ஆகாயத்தைப் பார்த்தால் மழைதான் வரும்! வசந்தசேனை வருவாளா? இரு; நன்றாகத் தேடிப் பார்க்கிறேன்.

**விடன் :** சகாரா! அவள் இருக்கும் இடத்தைச் சில அடையாளங்களால் தெரிந்துகொள்ளலாமே!

**சகா :** அடையாளமா,—என்ன?

**விடன் :** ஆபரணங்களின் ஓசை 'கல் கல்' என்று எழும்; புஷ்பங்களின் நறுமணம் 'கம்' என்று வீசும்.

**சகா :** (கவனித்து) இருடா, இருடா! அதோ! மாலையின் வாசனை நன்றாகக் காதுக்குக் கேட்கிறது; ஆனால், இருட்டு வந்து மூக்கை அடைத்துக்கொண்டு விட்டதே! அதனால் ஆபரணங்களின் ஓசையை அறிய முடியவில்லையே! இரு; இரு; அதோ, மெல்ல நடந்து வருகிறாள்.

[பலியைப் போட ரதனிகை வருகிறாள்; சகாரன் பாய்ந்து அவளைப் பிடித்துக்கொள்ளுகிறான்]

சகா : பிடித்து விட்டேன்! பிடித்து விட்டேன்! சாணக்கியன் திரௌபதியைப் பிடித்தமாதிரி பிடித்துவிட்டேண்டோய்! ஆ! கிடைத்தாள்! இவள் கூந்தலை........

ரத : ஐயையோ! யார்? யாரது? இது என்ன அநியாயம்! மைத்திரேயரே! மைத்திரேயரே!

விட : சகாரா! குரலைக் கேட்டால் வேறொருத்திபோல் தோன்றுகிறதே!

சகா : சும்மா இருடா! பாலுக்குக் கத்துகிற பூனைமாதிரி; வசந்தசேனை தன் குரலைப் பலவிதமாக மாற்றிக்கொள்வாள்; பயந்துடாதே!

ரத : ஆ! ஐயோ! மைத்திரேயரே! மைத்திரேயரே!

மைத் : (ஒரு விளக்கை ஏந்திய வண்ணம் கதவைத் திறந்துகொண்டு வருகிறான்) என்ன, என்ன ரதனிகே! ஏன் இந்த விளக்குக்கூடத் துடிக்கிறது?

சகா : (பயந்து) அடேய்! மனுஷண்டோய்! மனுஷண்டோய்!

[ரதனிகையை விட்டு விடுகிறான்]

ரத : மைத்திரேயரே! வாரும்! வாரும்! இவன் செய்யும் அக்கிரமத்தைப் பாரும்!

மைத் : ஏழையாய்விட்டவன் வீட்டிலே எல்லோரும் நுழைந்து அக்கிரமம் செய்வதா? நில்! விலகி நில்! நாய்க்குக் கூடத் தன் வீட்டில் வீரம் அதிகம்; தெரிந்துகொள்! ஏதாவது செய்தாயோ, உன் மண்டையை உடைத்து விடுவேன்!....ரதனிகே! வா உள்ளே!

விட : மன்னிக்க வேண்டும் ஐயா! இருட்டிலே ஆள் மாறாட்டம் நடந்துவிட்டது.

**மைத் :** மாறுண்டா மாறும்; பணமில்லாதவனைப் பார்த்தால் ஆளும் மாறும்; அறிவுங் கூட மாறும்.

**சகா :** இதைக் கேள்! நாங்கள் தேடி வந்தது ஒருத்தியை!

**விட :** ஆனால், பிடித்தது வேறு ஒருத்தியை!

**மைத் :** யாரைத் தேடி வந்தீர்கள்?

**சகா :** (விடனைப் பார்த்து) நீ சொல்லு!

**விட :** அவள் இவள் அல்ல; இன்னொருத்தி. (மைத்திரேயனின் காலில் விழுந்து) தயவு செய்து இந்தச் செய்தியைச் சாருதத்தரிடம் சொல்லாதீர்கள்.

**மைத் :** உண்மைதான்! ஏற்கெனவே அவர் மனம் அமைதியின்றி இருக்கிறது; இதைக் கேட்டால் மிகவும் வருந்துவார். ரதனிகே! நீயும் சொல்லாதே! வா!

[மைத்திரேயனும் ரதனிகையும் உள்ளே போகிறார்கள்]

**சகா :** அடேய்! நீ ஏன் அவன் காலில் விழுந்தாய்?

**விட :** பயத்தினால்தான்!

**சகா :** யாரிடத்தில்?

**விட :** சாருதத்தரின் நற்குணங்களிடத்தில்!

**சகா :** சீ! அந்தத் தரித்திரப் பயலைப் புகழாதே! ஒரு வேளை சோற்றுக்குக்கூட அவனுக்கு வழி இல்லை.

**விட :** அவர் அப்படி ஆகியது, நம்மைப் போன்றவர்களாலேதான்; கோடை காலத்தில் எல்லோருக்கும் ஜலம் அளித்து குளம் வறண்டு விட்டதப்பா!

**சகா :** பேசாதே! அவனுக்கென்ன அவ்வளவு பெருமை? அவன் யார்? என்னைப் போல சூரனா? ராதையின் பிள்ளை

ராவணனா? அல்லது குந்திக்கும் ராமனுக்கும் பிறந்த அசுவத்தாமனா?

**விட :** போடா முட்டாள்! சாருதத்தர் எப்பேர்ப்பட்டவர் தெரியுமா? தீனர்களின் கற்பகத் தரு; கல்விக்குக் கண்ணாடி; ஒழுக்கத்துக்கு உரைகல்; இந்த உலகில் அவர் ஒருவர்தாம் பெருமையை உரிமையாக்கிக்கொண்டு வாழும் உத்தமர். சரி, வா! போவோம்!

**சகா :** போவதா? வசந்தசேனை?

**விட :** அவள் இனி கிடைக்க மாட்டாள்!

**சகா :** எங்குப் போயிருப்பாள்?

**விட :** இது தெரியாதா! சாருதத்தர் வீட்டில் நுழைந்து மகிழ்ச்சியுடன் பேசிக்கொண்டிருப்பாள்.

**சகா :** அப்படியா? அடேய் சாருதத்தா! வ்சந்தசேனையை நீ என் கையில் ஒப்புவிக்காவிட்டால், அப்புறம் நீ படும் பாட்டைப் பார்! (விடனை நோக்கி) சரி, இனி நாம் போவோம்!

**விட :** இந்தா வாள்! (வாளைக் கொடுக்கிறான்).

**சகா :** நீயே வைத்துக்கொள்.

**விட :** இல்லை, நீதான்!

**சகா :** சரி, கொடு!

[வாளை வாங்கித் தலைகீழாகப் பிடித்துக்கொண்டு ஓடுகிறான்]

## காட்சி 7

[சாருதத்தன் வீடு; சாருதத்தனும் வசந்தசேனை யும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்]

**சாரு :** நீ என்னை மன்னிக்க வேண்டும்!

**வசந் :** எதற்காக?

**சாரு :** ரதனிகை என்று நினைத்து உன்னை அவ்விதம் அழைத்துவிட்டேன்.

**வசந் :** அதனாலென்ன? நீங்கள் அல்லவா என்னை மன்னிக்க வேண்டும், அநுமதியில்லாமல் உங்கள் வீட்டில் நுழைந்ததற்காக!

**சாரு :** வசந்தசேனே! உன் வீட்டில் நீ நுழைவதற்கு அநுமதி வேண்டுமா?

**வசந் :** (தன் ஆபரணங்களைக் கழற்றி, சாருதத்தனிடம் கொடுத்து) இந்த நகைகள் தங்களிடம் இருக்கட்டும்!

**சாரு :** என்னிடமா? எதற்காக?

**வசந் :** என்னைப் போலவே இந்த ஆபரணங்களும் தங்களிடம் அடைக்கலம் அடைந்துள்ளன. இந்த நகைகளின் காரணமாகத்தான் அந்தத் துஷ்டர்கள் என்னைத் தொடர்ந்தார்கள்.

**சாரு :** வசந்தசேனே! ஆபரணங்களை வைத்திருக்க இந்த வீடு ஏற்றதாக இல்லையே!

**வசந் :** அடைக்கலம் வைப்பது அதை ஏற்கும் மனிதனை உத்தேசித்தேயன்றி, அவர் வசிக்கும் வீட்டை நோக்கியல்ல! வாங்கிக் கொள்ளுங்கள்; என் தாயார் வழி பார்த்திருப்பார்கள்; நான் போகவேண்டும்.

சாரு : மைத்திரேயா! மைத்திரேயா!

மைத் : (வந்து) என்ன ?

சாரு : இதோ—இந்த நகைகளை வாங்கிக்கொள்.

வசந் : உய்ந்தேன்!

மைத் : (வாங்கிக்கொண்டு) சரியான பாத்திரம் அறிந்து கொடுத்தாய்; க்ஷேமம் உண்டாகட்டும்!

சாரு : பாத்திரமா? மைத்திரேயா! இது அடைக்கலப் பொருள்!

மைத் : இருக்கட்டுமே! அதனால், திருடன் கொண்டு போகக் கடவது என்று சொல்ல வேண்டுமா ?

சாரு : மைத்திரேயா! வசந்தசேனைக்குத் துணையாகப் போய் வா!

மைத் : நான் போவதா! முடியாதப்பா! ரதனிகைக்குத் துணையாகப் போனதே போதும்.

சாரு : ஏன்—என்ன நடந்தது ?

மைத் : (உற்றதைக் கூறாமல் மறைத்து) நடந்தது ஒன்று மில்லை; ஒரு பெண் அன்னத்தை ஒரு ராஜஹம்ஸம் தொடர்வதுபோல, வசந்தசேனைக்கு நீ துணையாகப் போனால், அது அழகாயிருக்கும். நான் தெருவிலே அழைத்துச் சென்றால், எறிந்த சோற்றை நாய்கள் பிடுங்குவதுபோல் அல்லவா என்னைப் பிடுங்கிக் கொன்று விடுவார்கள்!

சாரு : சரி, நானே போகிறேன் ; வசந்தசேனே! ராஜ மார்க்கத்தில் விளக்குகள் நன்றாய்ப் பிரகாசிக்கின்றன; அந்த வழியாக உன்னைக் கொண்டுபோய் விடுகிறேன்— வா! [இருவரும் போகிறார்கள்]

# காட்சி—8

[தெரு : ஸம்வாஹகன் விரைந்து வருகிறான்]

**ஸம்வாஹகன் :** அப்பப்பா! இந்தச் சூதாடும் பழக்கம் மிகவும் கெட்டது; புதுக் கட்டிலிருந்து அவிழ்த்துவிடப் பட்ட கழுதை உதைப்பதுபோல 'கர்த்தபீ' என்கிற கட்டையால் உதைக்கப்பட்டும், அங்கராஜனால் விடப்பட்டு கடோற்கஜனைக் கொன்ற 'சக்தி'யைப் போன்ற 'சக்தா' என்னும் கட்டையால் அழிக்கப்பட்டும், ஓடி வந்தேன்! ஏன்? சதா கணக்கையே எண்ணிக் கொண்டிருக்கும் சூதாடி சபிகனுக்கு நான் பத்துப் பொன் பாக்கி; அவன் பார்த்தால் விடமாட்டான்; ஒரு வழியும் தோன்றாமல் இப்பொழுது நடுத்தெருவிலே நிற்கிறேன்; யாரைச் சரணமடைவேன்?

[நடுங்குகிறான்]

**திரையில் :** அடேய்! அடேய்! அதோ ஓடுகிறான்! சூதாடிப்பயல்! பத்துப்பொன் பாக்கி! ஏமாற்றிவிட்டுத் தப்பி ஓடுகிறான்! பிடி! பிடி!

**ஸம் :** ஓகோ! சபிகனும் மாதுரனும் என்னை வேறு இடத்திலே தேடிக் கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் இங்கே வருவதற்குள் நான் பின்னாலேயே நடந்து போய், விக்கிரகம் இல்லாத அந்தப்பாழுங் கோவிலுக்குள் நுழைந்து சிலையைப்போல நிற்கிறேன்! பேஷ்! பேஷ்! பலே யோசனை!

[பின்னாலேயே நடந்து போகிறான்; சபிகனும் மாதுரனும் வருகிறார்கள்]

**மாதுரன் :** எங்கடா பத்துப் பொன் கடன்காரன்? பறந்து விட்டானே !

**சபிகன் :** பறந்தாலும் சரி, இறந்தாலும் சரி, நம்மிட மிருந்து தப்ப முடியுமா ?

**மாது :** இதோ பாரடா— பாதச் சுவடுகள்; இந்த வழியாகத்தான் போயிருக்கிறான்.

**சபி :** அடேய் ! சூதாடி சூது செய்திருக்கிறான் ; இந்த அடிச்சுவடுகளைப் பார்த்தாயா ! நம்மை ஏமாற்றுவதற்காகப் பின்புறமாகவே நடந்து போயிருக்கிறான்.

**சபி :** அப்படியா ! வா ! இந்தப் பாதச் சுவடுகளைப் பார்த்துக்கொண்டே போய் அவனைக் கண்டுபிடித்து விடுவோம்.

[பாதச் சுவடுகளைப் பார்த்துக் கொண்டே போகிறார்கள்]

## காட்சி—9

*[விக்கிரகம் இல்லாத பாழடைந்த கோயில் ; அதில் ஸம்வாஹகன் சிலைபோல் நிற்கிறான்.]*

**மாது :** அடேய் ! சபிகா ! இதற்கப்புறம் பாதச் சுவடுகள் இல்லையேடா !

**சபி :** மாதுரா ! கோயிலுக்குள்ளே பாருடா ! (இருவரும் ஜாடையாகப் பேசிக் கொண்டு)

**மாது :** இது என்னடா ? கல் சிலையா ? வா ? அருகில் போய்ப் பார்ப்போம்.

[ஸம்வாஹகனின் காதைத் திருகி, பலவிதமாக உடலை ஆட்டிப் பார்த்து]

சபி : சரி, உட்காருடா, ஒரு ஆட்டம் போடுவோம்.

மாது : இதோ—தயார் ! உருட்டிவிடு !

[சூது ஆடுகிறார்கள்]

சபி : இதோ ! என் பக்கம் !

மாது : தப்பு தப்பு ! எனக்குத்தான் ஜயம் !

ஸம் : பொய் பொய் ; எனக்குத்தான் வெற்றி !

[தன்னை மறந்து கூவுகிறான்]

சபி : ஓ, சிலை மனிதன் சிக்கிக் கொண்டாண்டோய் !

மாது : அடேய் ! எடு பணம் !

சபி : ஸம்வாஹகா ! கல்லைப்போல நின்று காடி பழக்கினாயே ! நீயாகவே அகப்பட்டுக் கொண்டாய்—பார்த்தாயா ?

ஸம் : என்னடா செய்வது? சூதாட்டத்தின் மகிமை அப்பேர்ப்பட்டது ; ராஜ்ஜியத்தை இழந்த அரசனுக்கு 'டக்கா' சப்தம் கேட்டதும் உற்சாகம் ஏற்படுவதுபோல, இந்தக் 'கத்தா' சப்தம் காசில்லாத மனிதனுடைய உள்ளத்தை அப்படியே அபகரிக்கிறதே ! மலையின் உச்சியிலிருந்து கீழே தள்ளுகிற இந்தச் சூதாட்டத்தை நான் ஒதுக்கித்தான் வைக்கிறேன் ; இருந்தும், குயிலினும் இனிய அந்தக் 'கத்தா'வின் குரல் கேட்ட மாத்திரத்தில் மனம் மயங்கி மறுபடியும் அதிலேயே இழுத்து விடுகிறதே ! அதனால் அல்லவா இப்போது அகப்பட்டுக் கொண்டேன் !

மாது : இல்லாவிட்டால் தப்பி விடுவாயோ ? உன் விஷயம் சூதாட்ட சங்கத்திலே தெரிந்து, உன்னைப் பிடிப்பதற்காக உத்தரவும் பிறந்தாச்சு, தெரிந்துகொள் !

ஸம் : (பயந்து) ஆ! சங்கத்தில் என்னைப் பிடிக்கச் சொல்லிக் கட்டளை பிறந்திருக்கிறதா!

சபி : ஆமாண்டோய்! எந்த சூதாட்டக்காரனும் சங்கத்தின் உத்தரவை மீற முடியாது.

ஸம் : ஆமாப்பா! நான் எங்கிருந்து பணத்தைக் கொடுக்கப் போகிறேன்?

சபி : அடகு வைத்துக் கொடு!

ஸம் : (யோசித்து) ஓ, நல்ல யோசனை!

(சபிகனிடம் போய்) சபிகா! பாதிக்கு அடகு வைக்கிறேன்; பாதியை விட்டுக் கொடு.

சபி : சரி, அப்படியே செய்!

ஸம் : (மாதுரனிடம் போய்) மாதுரா! நீயும் பாதியை விட்டுக் கொடுத்திடு.

மாது : ஆகட்டும்!

ஸம் : மகிழ்ச்சி! நன்றி! வணக்கம்! போய் வருகிறேன்!

மாது : போவதா? நில்! மரியாதையாகப் பணத்தைக் கீழே வை!

ஸம் : பணமா? இன்னுமா பணம்? ஐயா! எல்லோரும் பாருங்கள்! இரண்டு பேருமாக ஆளுக்குப் பாதி தள்ளிக் கொடுத்த பின் என் கடன் பூராவும் தீர்ந்து விடவில்லையா? இன்னும் பணம் பணம் என்கிறார்களே! நியாயமா? நீங்களே சொல்லுங்கள்!

மாது : (இழுத்து நிறுத்தி) அடேய்! நான் யார் தெரியுமா? மாதுரன்; மதுரைக்காரன்; உன்னை அடிக்கவும் இல்லை; திட்டவும் இல்லை; இப்பொழுதே பத்துப் பொன்னையும் கொடுத்துவிடு; ஆமாம்!

ஸம் : பொன்னு? தெய்வமே! சாருதத்தர் ஏழையான பிறகு பொன்னுக்கும் மதிப்பு இருக்கிறதா!

மாது : என்னடா கதைக்கிறே?

சபி : கொடடா பொன்னை!

[அடிக்கிறார்கள் :]

ஸம் : ஐயோ! ஐயோ! அடிக்கிறார்களே! காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்! (கூச்சலிடுகிறான்; தர்த்துரகன் அங்கே வருகிறான்.)

தர்த்துரகன் : வழி! வழி! என்ன இங்கே கூட்டம்? யார் இங்கே சண்டை போடுவது? ஓ! நீங்களா? ஸம்வாஹகா! மாதுரா! சபிகா! என்ன உங்களுக்குள்?

ஸம் : தர்த்துரகா! நாங்கள் மூன்று பேரும் சூது ஆடினோம்; நான் தோற்றுப் போனேன்; இவர்களுக்குப் பத்துப் பொன் தர வேண்டும்; அதற்காக என்னை அடிக்கிறார்கள் அப்பா!

தர்த் : இவ்வளவுதானே! சூதாட்டம் என்ன சாமானியமானதா! சிம்மாசனம் இல்லாத ராஜ்ஜியம் ஆயிற்றே!

மாது : அந்த வேதாந்தம் வேண்டியதில்லை; இப்பொழுது வரவேண்டியது பத்துப் பொன்.

தர்த் : அட! பத்தே பத்துப் பொன்தானே? விட்டுத் தள்ளு! எனக்குக் காலை வேளை ஆகாரத்துக்குக் கூடக் காணாது.

சபி : (தர்த்துரகன் கட்கத்தில் உள்ள உத்தரீயத்தைப் பிடுங்கி விரித்து, அதன் ஆயிரம் கண்களையும் காட்டி) இந்தக் கனவானுடைய வேஷ்டியைப் பாருங்கள்! இந்திரனைப் போல ஆயிரம் கண்கள்! இந்தப் பிரபுவுக்குக்

காலே வேளை ஆகாரத் திட்டம் பத்துப் பொன்னும்! பார்த்தீர்களா?

ஸம் : மாதுரா! நீயே சொல்! நான் வெறுங் கையன்! எங்கிருந்து பணம் கொடுப்பேன்?

மாது : உன் அப்பனை விற்றுக் கொடடா!

ஸம் : எனக்கு அப்பா இல்லையே!

சபி : அம்மாவை விற்றுக் கொடு!

ஸம் : அவளும் இல்லை!

மாது : அப்படியானால் உன்னையே விற்றுக் கொடு!

ஸம் : என்னையேவா? எப்படி விற்பது? யார் விற்பது? எங்கே விற்பது?

சபி : எப்படியா? விலை கூறி விற்பது! வாடா ராஜ வீதிக்கு! உம்!

[எல்லோரும் போகிறார்கள்.]

## காட்சி—10

*[ராஜ வீதி; மாதுரன், சபிகன், தர்த்துரகன், ஸம்வாஹகன், ஆகிய நால்வரும் வருகிறார்கள்; ஸம் வாஹகன் தன்னை விலை கூறிப் பாடுகிறான்.]*

**ஸம்வாஹகன்** (பாட்டு)

**ஆள் இருக்குது விலைக்கு வேணுமா—அதற்கு**
**ஐயிரு பொன் கொடுக்கத் தோணுமா......**
**நாள் முழுவதும் கால் பிடிக்கவும்**
**நல்ல நல்ல கதை படிக்கவும்**
**சூதில் தோற்ற சூரன் வேணுமா?—இந்த**
**சுந்தர சுகுமாரன் வேணுமா?.........**

மாது : பாட்டைநிறுத்துடா! பணத்தை எடு முதலிலே.

ஸம் : முதலே காலி ஐயா! எங்கிருந்து எடுக்கட்டும்.

சபி : அடேய்! நல்ல வார்த்தையாக் கேட்டா......

மாது : கொடுக்க மாட்டே! அடேய் சபிகா! நடத்து!

சபி : நடத்து!

[இருவரும் அடிக்கிறார்கள்.]

தர்த் : (தடுத்து) சீ சீ! முட்டாள் பயல்களா! அவனை அடிக்காதீர்கள்; என்னிடம் கை நீட்டிக் கேளுங்கள். பத்துப் பொன்னை இப்பொழுதே வீசி எறிகிறேன்.

மாது : ஓ! பெரிய சீமான் இவரு!

தர்த் : ஆமடா! சீமான்தான் நான்! பணக்காரன் தன் பணத்தைக் கழுத்திலே கட்டிக்கொண்டு திரிய மாட்டான்; பணம் இருக்கிறதென்று டமாரம் அடிக்க மாட்டான்; ஒரு பிச்சைக் காசு பத்துப் பொன்—அதற்காக, ஓர் உத்தமனை, ஐந்து புலன்களும் அழுக்கற்று இருக்கும் இந்த ஸம்வாஹகனை இப்படி அடித்துக் கொல்லுகிறீர்களே! நியாயமா இது?

சபி : ஐயா! தர்மப் பிரபுவே! பத்துப்பொன் உங்களுக்கு உதறித் தள்ளும் தூசு ஆக இருக்கலாம்; எங்களுக்கு அதுதான் ஆஸ்தி, ஆகையால் கொடுத்து விடு!

தர்த் : சரி, ஒரு காரியம் செய்யுங்கள்!

மாது : என்ன சொல்!

தர்த் : இன்னும் ஒரு பத்துப் பொன்னை இவனுக்குக் கடன் கொடுங்கள்; அதை வைத்து இவன் ஆடட்டும்.

சபி : ஆடினால்?

தர்த் : ஜயிப்பான்; ஜயித்தால் கொடுத்து விடுவான்!

மாது : தோற்றுப் போனால்?

தர்த் : கொடுக்க மாட்டான்!

சபி : அடேடே! என்ன நியாயம் பேசுகிறான்டா மாதுரா இவன்?

மாது : அடேய்! தர்த்துரகா! இவ்வளவு பேசுகிறவன் நீயே இவன் தர வேண்டிய பொன்னைக் கொடுத்து விடுவதுதானே?

சபி : இவனா? இந்த ஒழுக்கங் கெட்ட பயலா?

தர்த் : யாரடா ஒழுக்கங் கெட்டவன்?

மாது : நீதான்டா!

தர்த் : உங்கப்பன்டா!

[ஸம்வாஹகனை ஓடி விடும்படிச் சமிக்ஞை செய்கிறான்.]

மாது : அடேய்! வேசி மகனே! இப்படித்தானா உன் ஆட்டம்?

தர்த் : பின் எப்படி இருக்கும்?

சபி : அடேய்! ஸம்வாஹகா! கொடு! பத்துப் பொன் பாக்கி! கொடுத்துவிடு!

[ஸம்வாஹகனைப் பிடித்து இழுக்கிறார்கள்.]

தர்த் : அடேய்! முரட்டுப் பயல்களா! நான் இல்லாத சமயத்தில் நீங்கள் இவனை எது வேண்டுமானாலும் செய்ய முடியும்; என் கண் முன்னால் இவனை ஒன்றும் செய்ய முடியாது.

மாது : ஏன் முடியாது?

சபி : இதோ பார்!

[இருவரும் ஸம்வாஹகனைக் குத்து கிறார்கள்; ஸம்வாஹகன் மூக்கில் ரத்தம் பெருக மூர்ச்சையாகி விட்டவன்போல் பாசாங்குசெய்து கீழே விழுகிறான். அதற்குள், தர்த்துரகன் மாதுரனைத் தடுக்க, அவன் அடிக்கிறான்; தர்த்துரகன் திரும்ப அடிக்கிறான்.]

**மாது :** அடேய்! பேடிக்குப் பிறந்தவனே! இதற்குச் சரி யான பலனை அனுபவிக்கப் போகிறாய்!

**தர்த் :** போடா பொட்டை! நான் என்பாட்டில் போய்க் கொண்டிருந்தால் நீதானே தடுத்து என்னை அடித்தாய்! நாளைக்கு ராஜ வீதிப் பக்கம் வரப் போகிறேன்; அப் போது மட்டும் அடிச்சுப் பாரு!

**மாது :** பார்க்கிறேண்டா பார்க்கிறேன்!

**தர்த் :** பார்க்கிறானும்-எப்படிடா பார்ப்பே?

**மாது :** (தன் கண்களை அகற்றிக்கொண்டு) இப்படிப் பார்ப் பேண்டா——இப்படி!

[தர்த்துரகன் உடனே மண்ணை அள்ளி மாதுரன் கண்ணில் போட, ஸம்வாஹகனை ஓடிவிடும்படி ஜாடை காட்டுகிறான்; சபிகன் வேடிக்கை பார்த்துக்கொண் டிருக்கிறான்.]

**மாது :** (மெல்ல எழுந்து) அடேய்! தர்த்துரகா! என்னைப் பகைத்துக் கொண்டாய்; பார் என்ன செய்யப் போகி றேன் உன்னை!

தர்த் : என்னடா செய்வாய்? பாலகனிடம் சொல்லுவாய்! ஆரியகனை அடைத்ததைப்போல என்னையும் சிறையில் அடைப்பார்கள்; அவ்வளவுதானே! சித்தர் வாக்குப்படி எங்களுக்குத்தான் சுயராஜ்யம் வரப்போகிறதே! போடா போ!

சபி : மாதுரா! ஸம்வாஹகன் ஓடிவிட்டாண்டா!

மாது : அவன் எங்கே போய்த் தப்பமுடியும்? நான் குத்தின குத்திலே அவன் மூக்கு உடைஞ்சு, இதோ பார் ரத்தக்கரை! இதைப் பார்த்துக்கொண்டே போய் அவனைக் கண்டுபிடிக்கலாம் வா!

[இருவரும் போகிறார்கள்]

## காட்சி—11

[வசந்தசேனையின் வீடு; வசந்தசேனை உயரிய ஆசனம் ஒன்றில் உட்கார்ந்திருக்கிறாள்; மதனிகை அருகில் நிற்கிறாள்; ஸம்வாஹகன் பயந்து ஓடி வந்து வசந்தசேனையின் காலில் விழுகிறான்]

ஸம் : அம்மா! சரணம்! சரணம்! அபயம் தரவேண்டும்!

வசந் : பயப்படாதே! எழுந்திரு! மதனிகே! கதவை மூடித் தாளிடு........... அப்பா! யாரால் இப்படிப் பயப்படுகிறாய்?

ஸம் : பணக்காரரால் அம்மா.

வசந் : பணக்காரரா? மதனிகே? கதவை மூட வேண்டாம்; திறந்தே இருக்கட்டும்.

ஸம் : (ஆச்சரியத்தோடு) ஆ? பணக்காரர்களால் என்று சொன்னதும் அலட்சியம் உண்டாகிவிட்டதே; உண்மை தான்! தமது வன்மையை அறிந்து பொறுப்பை வகிப்ப

வருக்கு ஒரு போதும் தவறு நேர்வதில்லை; விலங்குகள் சூழும் காட்டிலே வாழ்ந்தாலும் அவர்களைக் கேடு சூழ்வதில்லை. அம்மா! இது இங்கே தெளிவாகிவிட்டது.

**வசந் :** மதனிகே இங்கே வா!

[மதனிகை அருகில் வந்ததும் ஸம்வாஹகனைப் பற்றிய வரலாற்றை விசாரிக்கும்படி ரகசியமாகத் தெரிவிக்கிறாள்.]

**மதனிகை :** (ஸம்வாஹகனை நோக்கி) ஐயா! நீர் யார்? எங்கிருந்து வருகிறீர்? இப்பொழுது பயம் ஏற்படக்காரணம் என்ன? தேவி கேட்கிறார்கள்; சொல்லும்!

**ஸம் :** நான் பிறந்த ஊர் பாடலிபுத்திரம்; என்னுடைய பெயர் "ஸம்வாஹகன்".

**வசந் :** ஸம்வாஹகன்?

**ஸம் :** ஆம்; அது எனக்குத் தொழிலால் வந்த பெயர். நான் கால் கைகளைப் பிடித்து வலி நீக்குவதில் சமர்த்தன்.

**வசந் :** நல்லது; உயர்ந்த கலையைக் கற்றிருக்கிறீர்.

**ஸம் :** முதலிலே, கலை என்று எண்ணித்தான் அதனைக் கற்றேன்; பிற்காலத்தில் அதுவே தான் வயிற்றுப் பிழைப்புக்கும் வழியாகி விட்டது.

**வசந் :** தவறல்ல; கலையும் வளர்ந்து கொண்டே வரும்.

**மத :** சரி; பாடலிபுரத்திலிருந்து உஜ்ஜயினிக்கு வரக் காரணம்?

**ஸம் :** ஒரு சமயம் எங்கள் ஊருக்குச் சில பிக்ஷுக்கள் வந்தார்கள்; அவர்கள் இந்தக் கிழக்குப் பிரதேசங்களைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்கள்; அதனால் இந்தப் பிராந்தி

யங்களைப் பார்க்க வேண்டும் என்றும் ஆவல் மேலிட்டு, இந்த உஜ்ஜயினி நகரம் வந்து சேர்ந்தேன்.

வசந் : வந்து ?

ஸம் : ஒரு கனவானை அடுத்தேன்.

மத : அவர் கை விட்டுவிட்டாரா ?

ஸம் : இல்லை யில்லை; அவர் மிகவும் நல்லவர்; இன் சொல் உடையவர்; எப்போதும் அவர் முகம் மலர்ந்தே யிருக்கும்; இல்லை என்று சொல்லத் தெரியாதவர்; நன்றியை மறவாதவர். ஒருவர் செய்த தீங்கை நினைக்கக்கூட அறியாதவர்; அதிகம் சொல்வானேன்? "பிறவி எடுத்ததன் பயன் பிறருக்கு உதவி செய்வதே" என்பது அவருடைய கொள்கை. அத்தகைய சரணாகத வத்சலர் என்னைக் கைவிடுவாரா ?

மத : ஆயின், நீர் ஏதேனும் அவரை..........?

ஸம் : நான் வஞ்சித்து வெளியேறவுமில்லை. அந்தக் கனவான் பெரிய வள்ளல்; அளவு கடந்து எல்லோருக்கும் கொடுத்துக் கொடுத்து, இப்பொழுது...........

வசந் : ஏழை ஆகிவிட்டாரா ?

ஸம் : ஆமாம் ; சொல்லாமலேயே தெரிந்து கொண்டீர்களே !

வசந் : ஆச்சரியமில்லையே ! நல்ல குணங்களும் செல்வமும் ஒன்றாகச் சேர்ந்திருப்பது அரிதல்லவா ? குடிப்பதற்குத் தகுதியற்ற தண்ணீரையுடைய குளந்தான் எப்பொழுதும் நிறைந்திருக்கும்.

மத : அவர் பெயர் என்ன ?

ஸம் : புகழையே பூஷணமாகக் கொண்ட அந்த பூலோக சந்திரனுடைய பெயரை அறியாதவரே இல்லையம்மா! அவருடைய திருநாமம் "சாருதத்தர்" என்பது.

வசந் : (எழுந்து) ஆ! அவரா? ஐயா! தங்களுக்கு நல்வரவு! இதோ—இந்த இல்லமே தேவரீருடையது! மதனிகா! ஆசனம் கொணர்ந்து போடு!

[மதனிகை ஆசனம் கொண்டு வர ஸம்வாஹகன் அமருகிறான்]

வசந் : விசிறி எடுத்துக்கொள்; களைப்புற்றிருக்கிறார். (மதனிகை விசிறுகிறாள்)

ஸம் : ஆஹா! சாருதத்தர் பெயருக்கே இவ்வளவு மகிமை என்றால்—அவருடைய அடிமைக்கே இப்படிப்பட்ட கௌரவம் என்றால்—அவரது சிறப்பை என்னென்று சொல்ல முடியும்? உலகத்திலே உயிருடன் வாழ்பவர் என்று சொல்ல வேண்டுமானால் அதற்குத் தகுதியுள்ளவர் சாருதத்தர் ஒருவர்தான்; மற்ற எல்லோரும் இருந்தும் இறந்தவரே ஆவர். (வசந்தசேனையைப் பார்த்து) அம்மா! தாங்கள் நிற்கிறீர்களே; வீற்றிருக்க வேண்டும்.

வசந் : (உட்கார்ந்து) உம்; அவருடைய பணமெல்லாம் போய்விட்டது; அப்புறம்?

ஸம் : நற்குணங்களோடு வறுமை மாத்திரமே அவரிடம் மிஞ்சி நின்றது; அதனால் எனக்குப் பிழைக்க வழியில்லாமல் போய்விட்டது; சரி, சூதாடி ஜீவிக்கலாமென்று நினைத்து இந்தத் தொழிலில் இறங்கினேன்; அதிலும் துரதிர்ஷ்டம் என் கூடவே இருந்து, இப்பொழுது பத்துப் பொன்னைத் தோற்கும்படி செய்துவிட்டது.

வசந் : யாரிடம் தோற்றீர்கள் ? அவர்கள் எங்கிருக்கிறார்கள் ?

ஸம் : வெளியே என்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

வசந் : மதனிகே! அவர்கள் வெளியே இருக்கிறார்களா ? பார்த்து வா !

[மதனிகை வெளியே போகிறாள்]

ஸம் : ஒரு வேண்டுகோள்! தேகத்தைப் பிடித்து நரம்புகளுக்கு உரமளிக்கும் இந்தக் கலையைத் தங்கள் பரிஜனங்களுக்குக் கற்பிக்க அநுமதி தருவீர்களா ?

வசந் : தவறு ; இதுவரையில் அதனை ஏற்றுக் கொண்டிருந்த அவர் ஒருவரே இந்தக் கலைக்கேற்ற பாத்திரம் அவரிடமே போய் இந்தக் கலையைப் பயன்படுத்துங்கள்.

மத : (வந்து) தேவி! இரண்டு பேர் இருக்கிறார்கள் ; ஆகாசத்தை ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு, பெருமூச்சு விட்டுக் கொண்டு, புலம்பிக்கொண்டு, நமது வீட்டையே பார்த்துக் கொண்டு..........

ஸம் : ஆ ! அவர்களே! அவர்களே ! மாதுரகன் சபிகன் என்னும் சூதாட்டக்காரர்கள்.

வசந் : (தன் கடகத்தைக் கழற்றி மதனிகையினிடம் கொடுத்து) இதைக் கொண்டுபோய், ஸம்வாஹகன் கொடுத்தார் என்று சொல்லி, அவர்களிடம் கொடு.

[மதனிகை வாங்கிப் போகிறாள்]

ஸம் : (மகிழ்ச்சியொடு) தேவி ! தேவி ! தங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன் ? அந்தோ ! தங்களைப் போன்ற உத்தம ஸ்த்ரீ ரத்னங்களும், சாருதத்தரைப் போன்ற தர்மசீலர்களும் வாழும் இந்த நாட்டிலே சூதாட்

டக்காரனாகிய என்னைப் போன்ற பாவிகளும் இருக்கிறார்களே! கவறாடிய கயவனுக்கும் கருணை புரிந்தீர்களே! நான் தங்களுக்கு மறு உதவி என்ன செய்ய முடியும்? எப்படிச் செய்ய முடியும்?

(யோசித்து) ஆம்; புரிந்தது; தாயே! தாங்கள் தாம் என் குரு. தாங்கள் என் கண்ணைத் திறந்து விட்டீர்கள். என் பாவங்களுக்கெல்லாம் பிராயச்சித்தமாக ஒரு வழி தென்பட்டுவிட்டது. இதோ! இந்த நிமிஷம் முதல் நான் துறவி. பௌத்த சந்நியாசி! இது நிச்சயம்! ஸத்யம்! (எழுந்து நிற்கிறான்)

வசந் : (எழுந்து) ஆஆ! ஸ்வாமீ! தங்களுக்குக் காஷாயம் கொடுத்தனுப்பும் கொடிய, கைங்கரியம் என்னைச் சார வேண்டாம். தயவு செய்து 'துறவு' பூண்பதை மறந்து விடுங்கள்.

ஸம் : தேவி! காஷாய உடை சமானியமானதன்று; உள்ளத்தின் மாசை அகற்றுவது; சந்நியாசம் என்னும் அழியாத சம்பத்தை அளிப்பது? தாமரை இலைமேல் நீர்த்துளிபோல் தத்தளிக்கும் மனத்துக்குச் சாந்தியளிப்பது; ஆதலால் தேவி! இந்த அடிமையைத் தடுக்கவேண்டாம்; இந்தச் சந்நியாசியை என்றைக்கும் மறக்க வேண்டாம். வந்தனம்; போய் வருகிறேன். (போகிறான்)

## காட்சி—12

[வசந்தசேனை இல்லத்தின் வாயிலை அடுத்த தெரு, மாதுரகனும் சபிகனும் வருகிறார்கள்.]

மாதுரகன் : டேய்! போகலாம் வாடா! பணம் வந்தாப் பலேதான்!

**சபிகன்** : டே! மதுரையான்! அவன் வசந்தசேனை வீட்டிலே நுழைஞ்சிட்டாண்டா!

**மாது** : வெளியிலே வராமலா போயிடுவான்; அப்புறம் இருக்கவே இருக்கு நீதி சபை. வாடா போகலாம்.

**சபி** : அடே! மதுரை! அதோ பாருடா!

[மதனிகை வருவதைக் காட்டுகிறான்]

**மாது** : ஆமா! டோய்! மீன் பிடிக்கிறவபோல தெரியுதில்லே?

**மதனிகை** : (அருகில் வந்து) வணக்கம்! (நமஸ்கரிக்கிறாள்)

**மாது** : அப்படிச் சொல்லு! எனக்குத்தானே இந்தக் கும்பிடு?

**சபி** : உஸ்! (மாதுரகன் வாயைப் பொத்தி) எனக்குத்தானே இந்த வணக்கம்?

**மதனி** : இரண்டு பேருக்கும்!

**சபி** : ஓஹ! தெரிஞ்சுது. அம்மா! மீன்கொத்தீ! என்னிடத்திலே பணம் இல்லே; உன் கண்ணடிக்கிற வித்தையை வேறே எங்காவது வச்சுக்கோ; போயிடு! இங்கே உன்னைப் பார்த்துக்கிட்டே இருந்தால், அந்த சூதாடி எங்கயாவது ஓடிப் போயிடுவான்! உம்—போ!

**மதனி** : சூதாடியா?

**மாது** : ஆமா! பத்துப்பவுன் பாக்கி; உள்ளே ஒளிஞ்சிருக்கிறான். அவனுக்காகத்தான் இங்கே வந்திருக்கிறோம்.

**மதனி** : அவர்தான் என்னை உங்களிடம் அனுப்பியிருக்கிறார்.

மாது : ஓ! அப்படிச் சொல்லு! பொன்னுக்குப் பதிலாக பொண்ணை அனுப்பிச்சிருக்காரா ?

சபி : ஏ! சுந்தரி! உன்னுடைய சதிர் ஆட்டம் எங்கள் சூதாட்டத்தின் முன்னே பலிக்காது; போயிட்டு வா!

மத : ஓ, சாம்பிராணிகளே! அவர் பெண்ணை அனுப்ப வில்லை; பொன்னைத்தான் அனுப்பி யிருக்கிறார். உங்கள் பணத்துக்குப் பதிலாக, இதோ—கடகம் கொடுத்திருக் கிறார்; வாங்கிக் கொள்ளுங்கள்.

மாதுரகனும் ;<br>சபிகனும் : } எங்கே? எங்கே?

மாது : (வாங்கிக்கொண்டு) ரொம்ப ரொம்ப சந்தோஷம்!

சபி : மிக்க மகிழ்ச்சி! கடன் தீர்ந்துவிட்டது என்று அவ ரிடம் தெரிவிச்சுடு.

மாது : அது மட்டுமல்ல; அந்த உத்தமனை உடனே இங்கே அனுப்பு.

சபி : நாங்கள் ஆடுவதற்காகக் காத்திருக்கிறோம் என்று சொல்.

மாது : சீக்கிரம் வரச் சொல்.

[மதனிகை போகிறாள்.]

## காட்சி—13

சாருதத்தனின் வீடு] [வெளிப்புறம். இரவு.

[சாருதத்தன் வாயிற் புறத்தில் வர்த்தமானகன், உட்கார்ந்து காவல் இருக்கிறான். அவனிடத்தில் வசந்த சேனை அடைக்கலமாகத் தந்த தங்கப் பானை இருக் கிறது.]

**வர்த்தமானகன் :** பாட்டுக் கச்சேரிக்குப் போன மனி சாளு—லேசிலே கிளம்ப முடியுதா? உம்; வர்ர போது வரட்டும்!

அட! கூலிக்கு வேலே செய்யறவனிக்கல்ல இந்த நாளிகை நச்சத்திரக் கணக்கெல்லாம்! காலிலே நகம் முளேச்ச நாள் மொதல் இந்த எசமானிடத்திலே காத்துகிட்டிருக் கிற எனக்கு எதுக்காக இந்தக் கவலே யெல்லாம்!

அட! பணம் காசு இன்னிக்குப் போவுது—நாளேக்கு வருது! இந்த அன்பும் ஆசையும் அப்படியில்லே பாரு!

அட! எதுக்காக பயப்படறேன் இன்னு .. நம்ம பொஞ் சாதி ஒரு மாதிரியான பொம்பிளே பாரு; ஏங்கிறயா?

அட! நான் கொஞ்சம் அளகா இருக்கிறேன் பாரு; அட! எங்கயாச்சும் அப்பிடி இப்பிடி இருக்கிறேனேன்னு நெனேச்சிட்டா....அட பயமில்லே—வீட்டிலே சண்டை வந்துடும் பாரு; அதுக்காகத்தான், பொளுது சாயறதுக் குள்ளற நான் ஊட்டுக்குப் போய்ச் சேரணுமிங்கிறது! இன்னிக் கென்னடான்ன....அங்கே இன்னும் பாட்டு முடியலேயாக்கும்—இவுக இன்னும் வந்து முடியலே.

அட! அப்படிக் கேக்கணுமின்ன, ஏம் பாட்டை விடவா ஒரு ஜந்து இனிமே பாடப் போவுது?

அட! சும்மா நானேதான் பாடிப் பாக்கறேன்—எத்தனே சீவன் பாட்டு கேக்க ஓடி வருது பாக்கிறயா? இதோ.... (கனேத்து)

[பாடுகிருன்] (பாட்டு)

பயிரைத் தின்று கொளுக்கும் மாட்டை—வழி
மறிக்க முடியாது—மனிசா!
அயல் புருஸன்மேல் ஆசை வைச்சால்—அவளே
அடக்க முடியாது—மனிசா!

ஆடிப் பணத்தைத் தோற்பவனே நீ—உன்னே
அடைக்க முடியாது—மனிசா !
பாடும் எனது பாட்டுக் கெங்கும்—எதிர்
பாட்டு கிடையாது—மனிசா !

[சாருதத்தனும், மைத்திரேயனும் வருகிறார்கள்.]

**மைத்திரேயன்** : உண்மையில் பாட்டு எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை !

**வர்த்தமானகன்** : என்ன, என்ன ? ஐயா ! மைத்திரேயரே ஏம் பாட்டு பிடிக்கல்லென்னு—உங்களுக்கு சாப்பிட்றது தூங்கறது தவிர, வேறே ஒண்ணுமே பிடிக்காதுன்னு தான் சொல்லணும்.

**மைத்** : என்ன—உனக்குப் பாட வேறே தெரியுமா ? நான் உன்னைச் சொல்லவில்லை. அங்கே கச்சேரியில் ஒரு பெண் வட மொழியில் பாடினதும், இன்னொரு ஆடவன் மெல்லிய குரலில் வலிப்பு வந்தவனைப் போல் கானம் செய்ததும் அடா—அடா—இரண்டு கண்ணும் இரண்டு காதும் போடவில்லை. நினைத்தால்கூட சிரிப்பு வருகிறது.

**சாருதத்தன்** : மைத்ரேய! தவருகச் சொல்லுகிருய்; ரேபிலன் மிகவும் அழகாகப் பாடினனே !

**மைத்** : ஆமாம்; திவச மந்திரம் சொல்வதுபோல இவன் பாடினன் ; புது மூக்கணுங்கயிறு பூட்டிய காளை "சூ சூ" என்று மூச்சு விடுவதைப் போல அவள் பாடினள். உம் பிராரப்தம் பலவிதம் !

**சாரு** : மைத்ரேயா ! உனக்கு அதன் அருமை தெரியவில்லை ; ரேபிலன் பாடியதில் ராகம், மதுரம், ஸ்வரம், ஸ்புடம், அழகு, லலிதம், மனேஹரம் இவை எல்லாம் இருந்தன.

மைத் : சரி; இன்னும் மேலானவைகூட இருந்தன; இந்த வர்ணனை போதும்! கடைத் தெருவில் நாய்கள் கூடத் தூங்கிவிட்டன; இனி, சேடன் வீட்டுக்குப்போகட்டும்.

சாரு : (சேடனை நோக்கி) ஆமாம்; வர்த்தமானக! அதிக நாழிகை ஆகிவிட்டது; நீ போ!

வர்த் : உத்தரவு! (நகைப் பாண்டத்தை மைத்ரேயனிடம் கொடுத்து) மைத்திரேயரே! இந்த நகையைப் பாது காக்க, பகலெல்லாம் நான் கண் முழிச்சு ஆச்சு; இனி; ராத்திரி காவல் உம்முடையது. வாங்கிக் கொள்ளுங்க. (கொடுத்துவிட்டுப் போகிறான்.)

மைத் : அட! இன்னுமா இது ஒழியவில்லை? இந்தஊரிலே ஒரு திருடன் கூடவா இல்லாமல் போய்விட்டான்? உம், தூக்கம் கண்ணைச் சொருகுது; சாருதத்தா! இந்தப் பிடையைக் கூடத்திலே வைத்து வருகிறேன்.

சாரு : மைத்ரேயா! அபசகுனம்போல் பேசாதே! இந்த நகைகள் ஒரு பெண்ணின் அடைக்கலப் பொருள்கள்; இதனைக் கண்ணைப்போல் காப்பாற்ற வேண்டியது நம் கடமை. அவளிடம் இதனைத் திரும்பச் சேர்ப்பிக்கும் வரையில் நீதான் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும்.

மைத். உம், சரி; ஒரு நாளைக்குத் தூக்கம் முழிச்சால் ஒன்பது நாள் பலம் போயிடும் என்பது பழமொழி; என் தூக்கந்தான் இந்த நகைகளைக் காப்பாற்ற வேண்டும். சரி; உள்ளே வா; தூங்கலாம்.

[வீட்டின் உட்புறம்—இருவரும் வெவ்வேறு இடங்களில் படுத்துத் தூங்குகின்றனர்; மைத்திரேயன் எழுந்து வந்து கதவை மூடித் தாளிட்டுச் செல்கிறான்.]

[வீட்டின் வெளிப்புறம். திரையி
லிருந்து பாடியவாறே சர்விலகன்
பிரவேசிக்கிறான்.]

சர்விலகன் : (பாட்டு)

*சோர சாஸ்த்ரமே ஆதாரம்—இந்தத்*
*தொழிலே எனக்குப் பிராண தாரம்...... (சோர)*
*ஆர அமர யோசித்து அழகு பெறக்கன்னம் வைத்து*
*வீர தீர பெயரெடுத்து வெற்றிக் கடலில் மிதக்க விடும்*
*(சோர)*

*தண்ணீர் அடிக்கடி படும் சுவரினிலே*
*கன்னமிட்டாலே சத்தமிராது*
*பெண்களின் பார்வை படுந்தலை மானால்*
*பிடித்துக் கொள்வார்கள் அது உதவாது (சோர)*

[சுவரின் பக்கமாக வருகிறான்; ஓர்
எலிவளை தென்படுகிறது; உடனே
சந்தோஷத்துடன்]

வெற்றி! நிச்சயம் வெற்றி! இதோ எலி வளை; இனி கஷ்டமில்லாமல் கன்னம்வைத்துவிடலாம். ஹே! தேவ! மஹாநுபாவ! களவுமதத்தை நிலைநாட்டிய ஸ்கந்த புத்ர! தங்கள் திருத்தாள் போற்றி! களவு நூலை இயற்றிய கனக சக்தி பகவானே! தங்கள் கழலடி போற்றி! களவு மதத்திலே, சித்தியிலக்கணத்தின் முதல் வாக்கியங்களே இவைதாம். அவையாவன; "கன்னம் வைக்கத் தொடங்கும்போது நான்கு வித உபாயங்களை அனுசரிக்க வேண்டும். அவற்றுள் :—ஒன்று; சுவரில் சுட்ட செங்கல் இருந்தால் அதனை இழுத்துப் பிடுங்கு; இரண்டு; பச்சைச் செங்கல்லாக இருந்தால் உடைத்து விடு; மூன்று; மண் சுவரானால் நனைத்துக் கரைத்து விடு

நான்கு; மரமாக இருப்பின் அறுத்துத் தள்ளு" என்பனவாம்.

ஆகையால், இந்த இடத்திலே சுடு செங்கல்லாக இருக்கிறபடியால் இழுத்துவிட வேண்டியதுதான்! இம்மட்டுமில்லை. சோர சாஸ்திரம் இன்னும் என்ன சொல்லுகிறது தெரியுமா? கன்னம் வைப்பதிலும் சில வடிவங்கள் அமைய வேண்டும் என்கிறது; என்னென்ன வடிவம்? தாமரைப்பூ, சூரியன், இளம்பிறை, தடாகம், ஸ்வஸ்திகம், பூர்ணகும்பம் இந்தமாதிரி யெல்லாம்;

இவ்வாறு சாமர்த்தியத்தைச் சாஸ்திரோக்தமாகக் காட்டிவிட்டால், மறுநாட் காலையில் அதனைப் பார்த்துக் கொண்டே இருப்பார்கள் ஜனங்கள்; ஆச்சரியமாகப் புகழ்வார்கள்; (ஆராய்ந்து பார்த்து) இந்த இடத்தில் சுட்ட கற்களை யுடைய இந்தச் சுவருக்குப் பூர்ணகும்பந் தான் அழகைத் தரும். ஆகையால் இங்கே அதனை அமைக்கிறேன்.

(மேலே பார்த்து): ஜய! ஆசிரிய! யோகாசார்ய! தங்கள் கருணைக்கு வணக்கம்; தங்கள் முதல் மாணவனாகிய எனக்குத் தாங்கள் மகிழ்ந்தளித்த 'மை' இதோ இருக்கிறது; இதை நான் தடவிக்கொண்டால், காவலாளிகள் கண்ணில் படமாட்டேன்; தப்பித் தவறி ஆயுதங்கள் மேலே பட்டாலும் தேகத்தில் காயம் ஏற்படாது. சரி; தங்கள் தயவைத் துணைக்கொண்டு ஆரம்பிக்கிறேன்.

(திடீரென்று நினைத்துக்கொண்டு): அடடா! அளக்கும் கயிறு கொண்டு வர மறந்து விட்டேனே!

(பூணூலைப்பார்த்து) ஓ! பலே! இதோ இருக்கிறதே பூணு நூல்! அந்தணனுக்கு இதைவிட மேலான உதவிப்

பொருள் வேறெதுவும் இல்லை. அதிலும் என்னைப் போன்றவர்களுக்குச் சொல்லவே வேண்டியதில்லை. ஏன் தெரியுமா ?

சர்விலகன் (பாட்டு)

**கன்ன வாசலை அளக்கலாம்; கடின வளையலைக் கழற்றலாம்;**
**பின்னிக் கதவில் பிணைத்த தாளைப் பின்னமின்றியே**
**[திறக்கலாம்;**
**பன்னகம், தேள் கடித்திட்டால், பரவு நஞ்சினைத் தடுக்கவே**
**உன்னி உடலிற் கட்டலாமிப் பூணு நாலினைக் கொண்டதால் !**

**சர்விலகன் :** ஓ, உள்ளே விளக்கு எரிகிறது; இரண்டு பேர் தூங்குகிறார்கள். உள்ளே போனவுடனே முதல் வேலை, என்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கதவைத் திறந்துவிட வேண்டும்.

ஒரு வேளை அது துருப்பிடித்த கதவாக இருந்து கத்த ஆரம்பித்துவிட்டால் ?

அதன் வாயிலே கொஞ்சம் தண்ணீர் ஊற்றினால் ஓசையே இராது அல்லவா ?

அது சரி; சமயத்துக்குத் தண்ணீர் கிடைக்காமற் போனால்?

இதோ—என் முதுகைக் கொடுத்து, கதவை அப்படியே தூக்கி வைத்து விடுகிறேன் ?

பேஷ், அதுதான் சரி. ஹே! ஆசாரிய! இதோ வணக்கம்!

[துதிக்கிறான்.]

**ஓம் நமோ வரதாய, கார்த்திகேயாய,**
**ஓம் நமோ கனகசக்தயே, ப்ரம்மண்ய தேவாய, வரதாய**
**ஓம் நமோ பாஸ்கர நந்திநே,**
**ஓம் நமோ யோகாசார்யாய !**

[உள்ளே கன்ன வாயிலின் வழி யாகப் பிரவேசிக்கிறான்; கதவைத் திறக்கிறான்; அது ஓசையுண்டாக் கியதால் தண்ணீரைத் தேடுகிறான்; தண்ணீர் கிடைக்காததால் தன் முதுகைக் கொடுத்துத் தூக்கி, கதவை ஒருபுறமாக வைத்துவிட்டு தூங்குகிற மைத்திரேயனையும் சாரு தத்தனையும் உற்றுப் பார்க்கிறான்.]

நன்றாகத் தூங்குகிறார்கள்; அதோ அங்கே கிடக் கும் டமாரத்தை அடித்தால்கூட எழுந்திருக்க மாட் டார்கள். ஆமாம்—இதென்ன வீடெல்லாம் மத்தளம், முக வீணை, கெஞ்சிரா, புல்லாங்குழல், வீணை, தம்புரா. புத்தகம், இந்த இனம் இருக்கிறதே யன்றி ரத்தினம், மாணிக்கம் முதலியன ஒன்றும் காணவில்லையே. இது என்ன ஒரு நாட்டிய ஆசிரியன் வீடா? இவன் உண்மை யாகவே தரித்திரன்தானா? அல்லது திருடன், அரசன் இவர்களிடத்தில் அச்சமுற்றுத் திரவியத்தைப் பூமியில் புதைத்து வைத்திருக்கிறானா? அதுவும்—இதோ—இந்த விதைகளைப் போட்டால் உடனே தெரிந்து விடுகிறது.

[விதைகளைப் பூமியில் போடுகிறான்]

சே! விதை விருத்தியாகவில்லை. இங்கே புதையலுங் கிடையாது; பொக்கிஷமுங் கிடையாது. உண்மையில் இவன் ஏழைதான் பாவம்! உம்; சரி; வந்தபடியே திரும் பிப் போக வேண்டியதுதான்!

மைத். (தூக்கத்தில் பிதற்றுகிறான்). வா அப்பா! இந்தத் தங்கப் பானையை வாங்கிக் கொள்!

**சர் :** (பயந்து) விழித்துக்கொண்டுவிட்டானா? (யோசித்து) அல்லது கனவு காண்கிறானா? (அருகில் போய்ப் பார்த்து) தூக்கந்தான்! கையிலே எதையோ துணியால் மூடி வைத்துக்கொண்டிருக்கிறான்..............

பாவம்! இவன் சொத்தை அபகரிக்கலாகாது; இவனும் என்னைப்போல் வருந்துகிற ஓர் ஏழைதானே?

**மைத் :** ஓ! இதோ! நான் சொல்லிவிட்டேன். உடனே வந்து இதை வாங்கிக் கொள்; இல்லாவிட்டால் பெரிய பாவத்துக்கு ஆளாவாய்.

**சர் :** சரி சரி; இனி வாங்கிக்கொள்வதுதான் மிகப் பொருத்தம்!

ஆனால், விளக்கு எரிகிறதே!....ஆம்; இந்த வண்டை ஏவினால் தீபத்தை ஒரு நொடியில் அணைத்துவிடும்.

(வண்டை விட்டு விளக்கை அணையச் செய்து) ஆஹா! இருள் சூழ்ந்துவிட்டதே! இந்தச் செயலால்—இந்த இடம் மட்டுமல்ல—என்னுடைய பிராமண குலமே அந்தகாரத்தால் சூழப்பட்டதல்லவா?........

உம்; என்ன செய்வது! அந்தணனாகப் பிறந்தும், அரிய மறைகளை ஐயமறக் கற்றும், 'ஈ' என்று கேளாத இயல்பைப் பெற்றும், மதனிகை என்னும் மங்கையை அடைவதற்காக—இப்பொழுது இத்தகைய பாவச் செயலுக்கும் துணிந்துவிட்டேன். உம், சரி; வாங்கிக் கொள்ளுகிறேன். (மைத்ரேயனிடம் சென்று கையை நீட்டி வாங்கிக்கொள்ளுகிறான்).

**மைத் :** (கொடுத்துவிட்டு) வாங்கிக் கொண்டாயா?

**சர் :** உன் விருப்பப்படி வாங்கிக் கொண்டேன்.

மைத் : என் பீடை ஒழிந்ததா ?

சர் : நான் சுமக்கிறேன் அதை !

மைத் : இனி, நான் தூங்கலாமல்லவா ?

சர் : நன்ருக ; நூறு வருஷம் தூங்கு ! வாழ்க உன் துயில் !

[தங்கப் பாத்திரத்துடன் வெளியேறுகிருன் ; வழியில் வந்த ரதனிகை அவனைப் பார்த்து விடுகிருள்.]

ரத : யார் ? யாரது ?....வர்த்தமானகன் எங்கே ? வர்த்தமானகா ! அடேய் ! வர்த்தமானகா ! நீ நாசமாய்ப் போக ! வர்த்தமானகா !

[இரைந்து கூவுகிருள் ; சர்விலகன் அவளைக் கொல்ல நினைத்து, மீண்டும் பெண் என்று கருதி விரைந்துஓடிவிடுகிருன் ; ரதனிகை பரபரப்புடன் உள்ளே வருகிருள்]

ரத : மைத்ரேயரே ! மைத்ரேயரே !

மைத் : உஸ் ! கத்தாதே ! நல்ல தூக்கம் !

ரத : உம்ம தூக்கத்திலே இடி விழ ! திருடன் வந்து ! கன்னம் வைத்துவிட்டு ஓடுகிருன் ; எழுந்திரும் ; எழுந்திரும்.

மைத் : (கண்ணை மூடியவாறே) என்ன ? கன்னம் வந்து திருடனை வைத்துவிட்டு ஓடியதா ! ஓடட்டும் ; ஓடட்டும்.

ரத : பாழும் பிராமணு ! கண்ணைத் திறந்து பாருமையா இதோ ! கன்ன வாசல் ! போய் தூதையம்மாளிடம் சொல்லுகிறேன்.

மைத் : (எழுந்து பார்த்து) சாருதத்தா! சாருதத்தா எழுந்திரு! எழுந்திரு! கள்ளன்! கள்ளன்! கன்னம் வைத்துவிட்டான்!

சாரு : (விழித்தெழுந்து) மைத்திரேயா! நான் பயப்படுவேன் என்றெண்ணி பரிட்சை செய்கிறாயா? தெரியும் எனக்கு; சும்மா படுத்துக் கொள்.

மைத் : பரிட்சையுமல்ல; பரிகாசமுமல்ல: நீயே பார்—அதோ, இன்னொரு வாசலைப் போல!

சாரு : (கன்ன வாசலைப் பார்த்து) ஆஹா! யாரோ சிறந்த கலைஞன்; கன்ன வாயிலுக்கும் ஒரு கண்ணியத்தை உண்டாக்கி யிருக்கிறான். இதைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம்போல் தோற்றுகிறது.

மைத் : ஆனால், இந்தத் தொழிலின் பெருமையை நம்மிடம் காட்டிச் சென்ற இவன்—ஒன்று அயலூரானாக இருக்கவேண்டும்; அல்லது இந்த வித்தையைப் பயிலுவதற்காக இங்கே வந்தவனாக இருக்க வேண்டும். ஏனென்றால்—இந்த ஊரிலே நம்முடைய சொத்தின் மதிப்பு யாருக்குத் தெரியாது? எல்லோரும் அறிவார்கள்! இவன் யாரோ போயும் போயும் இந்த வீட்டிலே நுழைந்திருக்கிறானே!

சாரு : மைத்திரேயா! என்ன அநியாயம் பாவம்! அயலூரிலிருந்து இவ்வளவு கஷ்டப்பட்டு வந்தவன், மாளிகையைப் போல் காணும் நமது வீட்டைக் கண்டு மயங்கிப் போய் உள்ளே நுழைந்துவிட்டான்; பணத்தைக் காக்கும் பாரம் இல்லாமையால் நாம் கவலையின்றி தூங்கும் உண்மையை அவன் எவ்வாறு அறிந்திருக்க முடியும்? நம் துயிலைக் கண்டு களிப்புடன் இல்லமெல்லாம் பொரு

ளைத் தேடிவிட்டு, ஒரு சல்லியும் காணுது உடைந்த மனத்துடன் வெளியே ஓடியிருக்கிறுன். இனி, அவன் தன் நண்பர்களிடமெல்லாம் நம்மிடம் ஏமாந்த கதையை எடுத்துச் சொல்லி எவ்வளவோ ஏங்குவான். உம்.... என்ன செய்வது?

மைத் : போதும் நீ கள்வனுக்கு வருந்துவது!.... திருட்டுப் பயல்—"பெரிய வீடாக இருக்கிறதே; பெரிய மூட்டை கட்டலாம்; ஏதாவது வெள்ளிப் பெட்டியோ—தங்கப் பானையோ கிடைத்தால்....(நினைவுக்கு வந்து) ஓ ஓ.... தங்கப் பானையை நீ வாங்கிக்கொண்டு விட்டாயல்லவா? (யோசித்து) பேஷ்! நல்லகாரியம் செய்தேன்! ஏற்கனவே உன்னுல் அடிக்கடி முட்டாள் பட்டம் கட்டிக்கொள்ளு கிறேன்; இதிலாவது தப்பினேனே! நல்லவேளை! இல்லா விட்டால் அந்தப் படுபாவி என்னிடமிருந்து தங்கப் பானையைப் பிடுங்கிக்கொண்டே போயிருப்பான்.

சாரு : என்ன மைத்ரேயா இது, சம்பந்தமில்லாத பரிகாசம்?

மை : பரிகாசம் எல்லாம் இதிகாசமாய்ப் போயிருக்கும், நான் மட்டும் தங்கப் பானையை உன்னிடம் கொடுக்காமல் இருந்திருந்தால்!

சாரு : தங்கப் பானையை என்னிடம் கொடுத்தாயா?

மைத் : ஆமாம்; அதனுல்தான் தப்பினேன். இல்லாவிட் டால் அந்தத் திருடன்........

சாரு : விளையாடாதே! நான் வாங்கிக்கொண்டேனு?

மைத் : ஆமாம்!

சாரு : எப்பொழுது?

மைத் : நான் தூங்கியபொழுது.

சாரு : சொப்பனமா? அல்லது பிதற்றுகிறாயா?

மைத் : இரண்டுமில்லை; நீ கையை நீட்டி தங்கப் பானையை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டாய்; இதில் எள்ளள வும் சந்தேகமில்லை.

சாரு : (மகிழ்ச்சியோடு) ஓ! புரிந்தது!

மைத் : என்ன என்ன?

சாரு : வந்தவன் வாழ்த்திக்கொண்டுதான் போயிருப் பான்.

மைத் : ஐயையோ! திருடன் கொண்டுபோய்விட்டானா?

சாரு : ஆமாம்! அவன் பட்ட கஷ்டம் வீணாகவில்லை.

மைத் : அவன் நாசமாய்ப் போக! ஐயோ! அது அடைக் கலப் பொருளாயிற்றே!

சாரு : (அப்போதே தன் நிலையை உணர்ந்து) ஆம்....ஆம் ....அடைக்கலப் பொருள்....(வருந்தி மூர்ச்சையடை கிறான்).

மைத் : (தெளிவித்து) சாருதத்தா! இதற்காகக் கவலைப் படாதே; திருடன் கொண்டு போனான் என்று சொல்லி விடுவோம்.

சாரு : யார் நம்புவார்கள் மைத்ரேயா? ஏழையின் உண் மைக்கு மதிப்பேது? வறியனைத் தூற்றுவதுதான் உலகத் தின் இயல்பு!........

ஆஹா! விதி! கொடிய விதி, என் பொருளையெல் லாம் கவர்ந்தது போதாமல் என் நல்லொழுக்கத்தையும் கவர்ந்து விட்டதே! என்ன செய்வது?

**மைத் :** சாருதத்தா! எனக்கு ஒருயுக்தி தோன்றுகிறது; நான் சொல்லி விடுகிறேன்—"தங்கம் என்றும் பானை என்றும் யாரும் எங்களிடம் கொடுக்கவும் இல்லை; அதை நாங்கள் பார்க்கவும் இல்லை" என்று! மீறி வழக்குத் தொடர்ந்தால் "சாட்சி கொண்டு வா" என்று சவால் விடுகிறேன்! சரிதானே?

**சாரு :** என்ன என்ன? நான் இன்னும் பொய்யை வேறே சொல்ல வேண்டுமா? மைத்திரேயா! பிச்சை எடுத்தாவது அடைக்கலப் பொருளைத் திருப்பிக் கொடுப்பேனேயன்றி உண்மைக்கும் ஒழுக்கத்துக்கும் ஒரு நாளும் களங்கத்தை உண்டாக்க மாட்டேன்.

**மைத் :** (எழுந்து) சாருதத்தா! நீ நன்றாக யோசித்து ஒரு முடிவுக்கு வா; நான் அதற்குள் ஒரு முக்கியமான காரியத்தை முடித்துவிட்டு வருகிறேன். (போகிறான்.)

## காட்சி—14

[வீதி : மைத்திரேயன் கவலையுடன் வருகிறான்.]

**மைத்திரேயன் :** என்னதான் இருந்தாலும் மனிதனுக்கு இவ்வளவு முட்டாள்தனம் கூடாது; எஜமானன் என்று எண்ணி பொருளைத் திருடன் கையிலே கொடுத்த என் மூளைக்கு இணை என் மூளை ஒன்றுதான்! இப்பொழுது என்ன செய்வது? ஒன்றுமே தோன்றவில்லை.

[ரதனிகை ஒரு ரத்தின மாலையுடன் வருகிறாள்.]

**ரதனிகை :** மைத்ரேயரே! நமஸ்காரம்!

**மைத் :** நீ நன்றாகத் தூங்கக் கடவது! என்ன விசேஷம். இந்த அதிகாலையில்?



ரத: அதிகாலையிலே ஓர் அற்புதமான வெகுமதி; வாங்கிக் கொள்ளும்!

[ரத்தின மாலையைத் தருகிறாள்.]

மைத்: (ரத்தின மாலையை வாங்கிப் பார்த்து) ரதனிகே! என்ன விளையாடுகிறாய்? யாருடையது இந்த ரத்தின மாலை?

ரத: யாருடையதாக இருக்க முடியும்? எந்த உத்தமி—எந்தப் பதிவிரதை-தன் கணவனுடைய நற்பெயரைக் காப்பதற்காக இதுவரையில் தன்னுடைய ஆபரணங்களை ஒவ்வொன்றாகக் கொடுத்து வந்தாளோ-அந்தக் கற்பரசியான "தூதை" அம்மாளுடையது இந்த ரத்ன ஹாரம்! வாங்கிக் கொள்ளும்!

மைத்: யார்? சாருதத்தருடைய தர்ம பத்நியா இதைக் கொடுத்தார்கள்? யாருக்காக?

ரத: உமக்காக! ஒரு விரதம் எடுத்துக்கொண்டார்களாம்; அது முடிந்ததற்காக-இதனை உமக்குத் தானமாகக் கொடுத்தனுப்பி யிருக்கிறார்கள்.

மைத்: ஓ! புரிந்துவிட்டது! ரதனிகே! இது வெறும் தானமல்ல; அபய தானம்! மான தானம்! சாருதத்தருடைய கவலை தூதையம்மாளுக்குத் தெரிந்துவிட்டதென்று நினைக்கிறேன்.

ரத: ஆம்; நான்தான் சொன்னேன்; வசந்தசேனையின் ஆபரணங்கள் களவு போனமைபற்றி தூதை மிகவும் வருந்தினார்கள். இனிமேல் இந்த உஜ்ஜியினியிலே உள்ளவர்கள், நாம் எல்லோரையும் ஏமாற்றிப் பிழைப்பதாக அபாண்டம் கூறி வம்பளப்பார்களே என்று கண்ணீர் உகுத்தார்கள்; திடீரென்று எதையோ நினைத்துக்

கொண்டு, தம் தாய் வீட்டிலிருந்து கொண்டு வந்த இந்த ரத்தினமாலையை உம்மிடம் கொடுக்கச் சொல்லி என்னை அனுப்பினார்கள்.

**மைத் :** அதன் பொருள் இதுதான்! சாருதத்தரிடம் கொடுத்தால்-பெருந்தன்மையால் அவர் இதை வாங்கிக் கொள்ள இசையமாட்டார்; ஆகையால், என்மூலமாக இதனை வசந்தசேனைக்கு அனுப்புகிறார்கள் தூதையம்மை!

**ஏத :** ஆம்; அதுதான் உண்மை!

(திரையில் பார்த்து) அதோ, சாருதத்தர் வருகிறார்! நான் போய் வருகிறேன்! (போகிறாள்)

**சாருதத்தன் :** (வந்து) மைத்திரேயா! நல்ல காரியம் செய்தாய்; இந்தத் துன்பத்திலே என்னை அங்கே தனியாக விட்டு........

**மைத் :** நான் இங்கே வந்துவிட்டேன்; அதற்காக இதை வாங்கிக் கொள். (மாலையைக் கொடுக்கிறான்)

**சாரு :** என்ன இது ?

**மைத் :** உனக்கு ஏற்ற நல்ல மனைவியை அடைந்த பலன்.

**சாரு :** கஷ்டம்! என் மனைவி இதை அனுப்பியிருக்கிறாளா ? மைத்திரேயா! இப்பொழுதுதான் நான் பூரண தரித்திரன்! பெண்ணின் ஆஸ்தியால் அவள் கணவன் போஷிக்கப்படும்போது—உண்மையில் கணவன் ஸ்திரீயாகவும், மனைவி புருஷனாகவும் மாறிவிடுகிறார்கள். (யோசித்து) இல்லை மைத்ரேயா! நான் தவறிச் சொல்லிவிட்டேன்; நான் தரித்திரன் அல்ல; மகா பாக்கியசாலி. ஏன் தெரியுமா? நான் தரித்திரனாக இருந்தால், பாக்கியத்

துக்குத் தக்கபடி நடக்கும் மனைவியையும், சுக துக்கங்களில் பிரியாத நண்பனாகிய உன்னையும், பழுதுறாத சத்தியத்தையும் எவ்வாறு பெற்றிருக்க முடியும் ?.......

நல்லது மைத்ரேயா! நீ உடனே போய் வசந்தசேனையைப் பார்; நான் மறதியால் அவளுடைய ஆபரணங்களை என்னுடையதென்று நினைத்து சூதாட்டத்தில் வைத்துத் தோற்றுவிட்டதாகக் கூறு! அதற்குப் பதிலாக இந்த ரத்தினமாலையை நான் அனுப்பியதாகச் சொல்லி அதை அவளிடம் கொடுத்து விடு!

**மைத் :** சாருதத்தா! அவள் நகைகளை நாம் அபகரிக்கவில்லையே! திருடன் அல்லவா கொண்டுபோய் விட்டான் அதற்காக, நாலு சமுத்திரத்தின் சாரமாகக் கிடைத்த இந்த ரத்தினமாலையையா கொடுப்பது ?

**சாரு :** ஆம்; அதுதான் நியாயம்; இது நகையின் மதிப்பல்ல; அன்பின் மதிப்பு. இதோ பார்! என்பேரில் ஆணையிட்டுச் சொல்! நீ இதை அவளிடம் சேர்ப்பிக்க வேண்டும்!

**மைத் :** சரி; உன் சித்தம் அவள் பாக்கியம்! அப்படியே செய்கிறேன்!

[இருவரும் வெவ்வேறு திசையில் செல்கிறார்கள்]

## காட்சி—15

[வசந்தசேனையின் வீட்டில் பின்புறத்துள்ள நந்தவனம், சர்விலகன், தான் சாருதத்தன் வீட்டில் திருடிய ஆபரணங்களை துணியால் மூடி எடுத்துக் கொண்டு வருகிறான்.]

**சர்விலகன் :** இரவிலேதான் எனக்கு ஒளி; பகற் காலங்களிலே என் பிரகாசம் பாழடைந்து விடுகிறது; என் இருட்டுத் துணைவனை இந்த முரட்டுச் சூரியன் ஓட்ட வருகிறபோது என் திருட்டுத் தொழிலுக்குப் பெரிய ஆபத்து ஏற்படுகிறது. காவலாளிகளையும் ஏமாற்றித் தூக்கத்தையும் வென்றுவிடும் எனக்கு, பகைமை பூண்ட இந்தப் பகலோடு போராட முடிவதில்லை........"

நேற்று ராத்திரி வந்துகொண்டே இருந்தேன்; திடீரென்று ராஜசேவகர்கள் என் அருகிலே தோன்றினார்கள். உடனே என்ன செய்தேன் தெரியுமா? அந்த வீட்டிலே உள்ள ஒரு தூண்போல அப்படியே நின்றுவிட்டேன். ஆனாலும், யாராவது என்னை உற்றுப் பார்த்தால் இந்த மனம் 'திக்திக்' என்று அடித்துக் கொள்ளுகிறது. எங்காவது பேச்சுக் குரல் கேட்டால் நம்மைப் பற்றித்தான் பேசுகிறார்களோ என்று உள்ளம் சந்தேகிக்கிறது. காரணம் .. என் குற்றங்கள்; என் குற்றங்களுக்கெல்லாம் காரணம் மதனிகை.......(மதனிகை வருவதைப் பார்த்து)

ஓ! வந்துவிட்டதே என் காதலின் வெப்பத்தைத் தணிக்கும் சந்தனக் குழம்பு!

(உரத்த குரலில்) மதனிகே! மதனிகே! வா! இங்கே வா!

[மதனிகை அருகில் வருகிறாள்]

**மதனிகை :** நீங்களா? இங்கேயே வந்துவிட்டீர்களே!

**சர் :** காரியமாகத்தான்! சரி; ஓர் இரகசியம்!

[தற்செயலாக அங்கு வந்த வசந்தசேனை இவர்களைப் பார்த்துவிட்டு மறைந்து நிற்கிறாள்]

சர் : இங்கே வேறு ஒருவரும் இல்லையே?

மத : இல்லை; என்ன சங்கதி? சொல்லுங்கள்!

சர் : வசந்தசேனைக்குப் பணம் கொடுத்துவிட்டால் உன்னுடைய அடிமை விலங்கு நீங்கிவிடுமல்லவா?

மத : நீங்கிவிடும்; ஆனால் அதற்கு அவ்வளவு பணம்?

சர் : கிடைத்துவிட்டது; உன் பொருட்டு நான் புரிந்த சாகசச் செயல் நல்ல பலனைக் கொடுத்தது.

மத : சாகசச் செயலா? முன்பு கூறினீர்களே, அந்தக் கொடிய காரியமா?

சர் : கொடிய காரியமென்று தெரியாமல் சொல்லுகிறாய்; சாகசக்காரனிடந்தான் லக்ஷ்மீ கடாக்ஷம் நிரம்பியிருக்கும்.

மத : நல்லது; அந்தத் திருவின் அருளைத் திருடியோ, கொள்ளையடித்தோ சம்பாதிக்கவில்லையே?

சர் : மீண்டும் கூறுகிறேன் கேள்; இதைச் சர்விலகன் மலர்களோடு குலுங்கும் கொடி போன்று ஆபரணங்களோடு விளங்கும் ஸ்த்ரீயிடம் கொள்ளையடிக்கமாட்டான். வேள்விக்காகச் சேமித்து வைத்திருக்கும் வேதியன் பொருளையும் கவரமாட்டான்; செய்யத்தகாததை இவன் செய்யவே மாட்டான்; ஆகையால் பயப்படாதே! வசந்தசேனைக்கு என்றே அளவு எடுத்து செய்ததைப் போன்ற ஆபரணம் தருகிறேன். அதனைக் கொடுத்து விட்டு விடுதலை பெற்றுக்கொண்டு வா!

மத : எங்கே அந்த ஆபரணம்?

சர் : இந்தா! (மதனிகையிடம் கொடுத்த பின்) வசந்தசேனையை அணிந்து கொள்ளச் சொல்!

மத : (ஆபரணத்தைப் பலமுறை உற்றுப் பார்த்து) இதை நான் இதற்குமுன் எங்கேயோ பார்த்திருக்கிறேனே; எங்கிருந்து கொண்டு வந்தீர்கள்?

சர் : அதைப்பற்றி உனக்கென்ன ? நீ எடுத்துக் கொண்டு போ.

மத : உள்ளம் ஒன்றியபின் ஒளிவு மறைவு எதற்காக? என்னிடம் நம்பிக்கையில்லையா ? அப்படியானால் எனக்கு விடுதலையே வேண்டாம்.

சர் : கோபியாதே மதனிகே! நெஞ்சை யொளித்து ஒரு வஞ்சகமில்லை.

மத : ஆயின், ஏன் தயக்கம்? சொல்லுங்கள் !

சர் : அந்த வீடு யாருடையதென்று எனக்குத் தெரியாது; ஆனால், காலையிலே செட்டிமார்த் தெருவில் பேசிக் கொண்டார்கள்—சாருதத்தன் என்பவனுடைய வீட்டில் என்று !

மத : (நடுங்கி) ஆ! ஆ!

[வசந்தசேனை மறைவிலே உற்றுக் கேட்டு "ஹா" என்று தள்ளாடுகிறாள்]

மத : பாவி! சாருதத்தரைக் கொன்றுவிட்டாயா ?

சர் : மதனிகே! எதற்காக நீ இப்படி நடுங்குகிறாய்? நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேனே;—"தூங்குகிறவனையும் பயந்தவனையும் துன்புறுத்தமாட்டேன்" என்று.

மத : ஆனால் சாருதத்தரை நீ அடிக்கவோ கொல்லவோ இல்லையே?

சர் : இல்லவே இல்லை.

வசந் : அப்பா! பிழைத்தேன்!

மத : சத்யமாக ?

சர் : சத்யமாக ! அது சரி; அவனிடம் உனக்கென்ன இவ்வளவு....

மத : அன்புதான் ! இப்பொழுது என் மகிழ்ச்சி எல்லை கடந்துவிட்டது.

சர் : புரிந்தது; துரோகி ! உன் உள்ளம் தெரிகிறது ! ஐயோ ! என் குலத்தை மதிக்காமல், என் குணத்தை மதிக்காமல் உன்பேரிலுள்ள உண்மைக் காதலால் இப்படிப்பட்ட இழிவான தொழிலுக்கும் அடிமையானேன் ! ஆனால்.... ஏ ! வஞ்சகி ! என் நட்பை மறந்து, என் காதலை மறந்து, நீ இன்னொருவனை இதயத்திலே வைத்துக் கொண்டாய். (வெறுப்புடன்) ஆமாம்; இது சகஜம் ! மரத்திலுள்ள கனிகளையெல்லாம் பறவைகள் புசித்துவிட்டு அந்த விருக்ஷத்தை மொட்டையாக்கி நிறுத்துவதுபோல—நற்குலத்தில் பிறந்த தனிகரின் செல்வத்தையெல்லாம் வேசிகள் சூறையாடி, அவர்களை ஆண்டியாக்குகிறார்கள்........

செல்வமும், ஸ்த்ரீகளின் உள்ளமும் 'செல்வோம்' என்று பல பேரை நாடிச் சென்றுகொண்டே இருக்கும். தனத்தினிடமும் தையலிடமும் விசுவாசம் வைக்கும் மனிதர்களெல்லாம் மூடர்கள்; அதிலும் ஸ்த்ரீகள் தன்மையோ—பயங்கரமானது ! தங்களுக்குக் காதல் இல்லையென்றால், தம்மை விரும்புவோரை அவமானப்படுத்தத் தயங்கவே மாட்டார்கள். உண்மைக் காதல் கொள்ளும் உத்தம ஸ்த்ரீயே அநுப்விக்கத் தக்கவள்; காதலற்ற கபடப் பெண் கொல்லப்பட வேண்டியவள்......

ஆஹா! இந்தப் பெண் இனத்தின் இயல்பைப்பற்றி ஒரு பெரியார் மிகவும் அழகாகச் சொல்லியிருக்கிறார்; அவர் சொல்லுகிறார்:—

" விலைமாதரும் மயானத்திலே மலர்ந்த மலர்களும் ஒன்று!"

"இந்தப் பாவிகள், பணத்தின் நிமித்தமாக ஒருசமயம் அழுவர்; மற்றொரு தருணம் சிரிப்பர்; தம்மை நம்பச் செய்வர்; தாமும் நம்புவர்; ஆனால் அவர்களுடைய உள்ளன்பெல்லாம் ஒரு முகூர்த்த காலந்தான் நிலைத்திருக்கும். சாற்றைப் பிழிந்தெடுத்து சக்கையை வெளியே எறிவது போல, பணத்தையெல்லாம் பறித்துக்கொண்டு, பிறகு அந்தப் புருஷனை தெருவிலே விரட்டி விடுவர்.

"மாதரின் சுபாவம் மகா சஞ்சலத்தன்மை வாய்ந்தது; சபலத்தால் ஊசலாடுவது; அதிலும் இவர்கள் மகா கொடியவர்கள்; மயானத்திலுள்ள மலர்களைப்போல் விலக்கத் தக்கவர்கள்......" என்று.

இவர்களுக்கெல்லாம் மனத்திலே ஒருவன்; மனையிலே ஒருவன்; கண்ணடிக்க ஒருவன்; காதல் புரிய ஒருவன்: ஆகையால் வேசி குலத்தில் பிறந்தவர்கள் ஸ்திரீகளே அல்லர்; அவர்கள் குதிரையின் ஜேணத்தைப் பூட்டிக் கொண்ட கழுதைகள்.

(சினத்துடன் உரத்த குரலில்) அடேய்! சாருதத்தா! என் காதலில் மண்ணை அள்ளிப் போட்டாய்! இனி நீ உயிரோடு இருக்கப் போவதில்லை.

மத: ஸ்வாமீ! இல்லாததை எண்ணிக்கொண்டு எதற்காக இப்படிக் கோபிக்கிறீர்கள்?

சர்: எது இல்லாதது?

மத : தாங்கள் நினைப்பது ! இந்த நகைகளெல்லாம் எங்கள் எஜமானி அம்மாளுடையவை.

சர் : என்ன ?

மத : எங்கள் வசந்தசேனை சாருதத்தரிடம் இவற்றை அடைக்கலமாகக் கொடுத்திருந்தார்கள்.

சர் : எதற்காக ?

மத : (காதில் கூறி) இதற்காக ! இதுதான் உண்மை விஷயம் !

சர் : (பதறி) அப்படியா ? என்ன கொடுமை செய்துவிட்டேன் ! கடும் வெயிலில் நிழலுக்காக நான் தங்க விரும்பிய மரத்தையே என்னை அறியாமலே மொட்டையடித்து விட்டேனே !

வசந் : வருந்துகிறான் ; பாவம் ! அறியாமல் செய்திருக்க வேண்டும்.

சர் : மதனிகே ! இப்போது நான் என்ன செய்வது ? சொல் ! ஒரு வழி சொல் !

மத : எனக்கென்ன தெரியும்? நீங்கள்தாம் படித்தவர்கள்.

சர் : மதனிகே ! ஆண்களின் அறிவு, அவர்கள் படித்த நூலின் அளவே ஏற்படும்; பெண்களோ, இயற்கையிலேயே அறிவாளிகள். ஆகையால், நீதான் எனக்கு......

மத : சொல்லுகிறேன் ; ஆனால் அதன்படியே நீங்கள் செய்ய வேண்டும்.

சர் : கட்டாயம் செய்கிறேன் !

மத : இந்த ஆபரணங்களைக் கொண்டு போய் சாருதத்தரிடமே கொடுத்து விடுங்கள்.

சர் : அரசனிடம் என்னைக் காட்டிக் கொடுத்துவிட்டால்?

மத : சந்திரனிடத்தில் வெயில் பிறக்காது.

[வசந்தசேனை இதைக் கேட்டு மகிழ்ச்சியுறுகிறாள்]

சர் : ஆயினும், இந்த அற்பத் தொழில் எனக்கு வெட்கத்தை உண்டாக்குகிறது. வேறு உபாயம் ஒன்றுமே இல்லையா ?

மத : (யோசித்து) இருக்கிறது ; ஒன்று செய்யுங்கள் சாருதத்தருடைய ஆளாகவே வந்து, இவற்றை என் எஜமானியிடம் கொடுத்து விடுங்கள்.

சர் : கொடுத்தால் ?

மத : நீங்களும் திருடனில்லை ; சாருதத்தரும் கடனாளி இல்லை ; வசந்தசேனைக்கும் ஆபரணம் கிடைத்துவிடுகிறது.

சர் : மதனிகே! சரியானயுக்தி! சந்திரன் இல்லாத இரவில் காட்டிலே வழி காட்டுவதுபோல—சிக்கலான இந்தத் தருணத்தில் என் புத்திக்குக் கூர்மையளித்தாய்; இதோ, கொண்டு போய்க் கொடுக்கிறேன்.

[இதைக் கேட்ட வசந்தசேனை விரைந்து வீட்டுக்குள் போய் ஒன்றும் அறியாதவள்போல் உட்காருகிறாள்]

மத : பொறுங்கள்; நான் முதலில் போய், உங்கள் வரவைத் தெரிவித்து விட்டு வருகிறேன் ; பிறகு நீங்கள் வரலாம்.

சர் : சரி!

[மதனிகை போகிறாள்]

## காட்சி—16

[வசந்தசேனையின் வீடு. வசந்தசேனை அமர்ந்திருக்கிறாள். ஒருபுறமாக மதனிகை வருகிறாள்.]

**மதனிகை** : அம்மா! சாருதத்தரிடமிருந்து யாரோ ஒரு பிராமணர் வந்திருக்கிறார்.

**வசந்தசேனை** : எங்கே இருக்கிறார்?

**மத** : வெளியே நிற்கிறார்.

**வசந்** : அபசாரம் உள்ளே வரச் சொல்.

[மதனிகை சென்று சர்விலகனை அழைத்து வருகிறாள்.]

**மத** : வாருங்கள், வாருங்கள்.

**சர்விலகன்** : மங்களமுண்டாகட்டும்.

**வசந்** : தங்கள் ஆசியால். உட்காருங்கள்.

**சர்** : சாருதத்தர் சொன்னார்: 'வீடு மிகவும் மோசமாக இருப்பதால் இந்த ஆபரணங்களைக் காப்பாற்றுவது கடினமாக இருக்கிறதாம். ஆகையால் இந்த நகைப் பெட்டியைத் தங்களிடம் கொடுத்து வரச் சொன்னார்,

[மதனிகையிடம் கொடுத்துவிட்டுப் புறப்பட முயல்கிறான்.]

**வசந்** . சற்றிருங்கள். அவர் மற்றொன்றும் என்னிடம் சொல்லி யிருக்கிறார். இந்த ஆபரணங்களை யார் கொண்டு வருகிறாரோ அவருக்கு இந்த மதனிகையைக் கொடுத்து விட வேண்டுமென்று கட்டளை யிட்டிருக்கிறார். ஆகையாலே மதனிகையைத் தாங்கள் ஏற்றுக்கொள்ள வேண் வேண்டும்.

**சர் :** (தனக்குள்) ஓ! விஷயம் தெரிந்துவிட்டது போலும். சாருதத்தா! பேஷ். அம்மணி! மனிதன் நல்லனவே செய்தல் வேண்டும். நற்குணமே கொள்ள வேண்டும். குணம் நிறைந்தவன் தரித்திரனாக இருந்தாலும் குணமற்ற கடவுள்கூட அவனுக்குச் சமமில்லை நற்குணங்களாலே அடைய முடியாத பொருளே இல்லை. கலைமதி சிவபிரானின் சிரத்திலே ஏறியது அவனுடைய குணத்தின் மேன்மையால்தான். ஆகையால்....

[ஒரு சேவகன் பிரவேசித்து]

**சேவ :** அம்மா! வண்டியைக் கொண்டு வந்து தெருவிலே நிறுத்தி யிருக்கேன்.

**வசந் :** இதோ வருகிறேன், போ. மதனிகே! உன் கணவரோடு செல். இனி நீ எனக்கு அடிமையல்ல; உன் கணவரின் சொத்து. ஆயினும் என்னை மறந்துவிடாதே.

**மத :** (காலில் விழுந்து) தாயே! நான் இனி....

**வசந் :** வணங்கத் தக்கவளாகிவிட்டாய். போய் வா! என்னை நினைத்துக்கொள்.

**சர் :** அம்மையே! நன்மை அடைவீர்களாக! மதனிகே! உன்னால் என்றைக்கும் அடைய முடியாத 'வது' என்ற மங்கலப் பெயர் இந்த உத்தமியால் உனக்குக் கிடைத்து விட்டது. ஆதலின் இவரை அன்போடு நோக்கித் தலையால் வணங்கு!

[மதனிகை வணங்குகிறாள்.]

**வசந் :** பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாய் நீடூழி வாழ்வாயாக! சென்று வா!

[மதனிகை சர்விலகனோடு போகிறாள். மறுபுறத்தில் ஒரு சேவகன் வந்து]

சேவ : தாயே! ஒரு அந்தணர் சாருதத்தரிடமிருந்து வந்திருக்கிறார்.

வசந் : ஆஹாஹா! எவ்வளவு ரமணீயமான நாள் இன்று. போ! உள்ளே வரச் சொல் அவரை.

சேவ : உத்திரவு.

[போகிறான்; உடனே மைத்திரேயன் வருகிறான்.]

மைத் : மங்களம் உண்டாகட்டும்.

வசந் : வணக்கம்; வாருங்கள்; அமருங்கள்.

[எழுந்து உபசரிக்கிறாள்; மைத்திரேயன் உட்காருகிறான்.]

மைத் : நீங்களும் அமருங்கள்.

வசந் : (உட்கார்ந்து) வள்ளல் சௌக்கியமா யிருக்கிறாரா?

மைத் : சௌக்கியமாயிருக்கிறார்.

வசந் : மைத்திரேயரே! நற்குணமாகிய தளிரும், விநயமாகிய கிளைகளும், நம்பிக்கையாகிய வேரும், பெருந்தன்மையாகிய மலரும் கொண்ட சாருதத்தர் என்னும் சாது விருக்ஷத்தை—நண்பர்களாகிய பறவைகள் இனிது அடைந்து வாழ்கின்றன அல்லவா?

மைத் : சரியாகச் சொன்னீர்கள்; உண்மை!

வசந் : தாங்கள் இவ்விடம் வந்தது?

மைத் : சாருதத்தர் விஷயமாகத்தான்; அவர் சிரம் மேல் கரங் கூப்பிக் கேட்டுக் கொள்ளுகிறார்.

வசந் : (வணங்கி) என்ன கட்டளை யிடுகிறார்—தெரிவியுங்கள்!

**மைத் :** அவர் ஒரு நாள் சூதாட்டத்திலே உட்கார்ந்து ஆடத் தொடங்கினார்; தம்மையே மறந்து போனார்; நீங்கள் கொடுத்திருந்த நகைப் பாண்டத்தை அவருடையதாக எண்ணி, அதனைப் பந்தயம் வைத்து ஆடித் தோற்றுவிட்டார்; பிறகு, அந்த ஆபரணங்களைப் பறித்துப் போன சூதாட்டக்காரன் சென்ற இடமே தெரியவில்லை.

**வசந் :** வெகு அழகு! சூதாட்டக்காரர் ஆகிவிட்டாரா அவர்? உம், அப்புறம்?

**மைத் :** அதற்குப் பதிலாக—இதோ, இந்த விலை உயர்ந்த ரத்தின மாலையை அனுப்பி யிருக்கிறார்.

[ரத்தின மாலையைக் காட்டுகிறான்; வசந்தசேனை யோசிக்கிறாள்.]

**மைத் :** வாங்கிக்கொள்ள மாட்டீர்களா?

**வசந் :** மைத்திரேயரே! ரத்தின மாலையையா வாங்கிக் கொள்ள மாட்டேன்? கொடுங்கள்! (வாங்கிக்கொண்டு) நான் இதைப் பற்றி யோசிக்கவில்லை; மா மரத்திலே புஷ்பங்கள் இல்லாதிருந்துங்கூட, இன்னும் தேன் துளி விழுகிறதே என்பதைத்தான் எண்ணிப் பார்த்தேன். சரி; தாங்கள் போய் அந்தச் சூதாட்டக்காரரிடம் நான் சொன்னதாகச் சொல்லுங்கள்....

**மைத் :** என்னவென்று?

**வசந் :** இன்று மாலை நான் அவரைப் பார்ப்பதற்காக அவ்விடம் வருகிறேன்—என்று!

**மைத் :** நல்லது; நான் விடை பெறுகிறேன்!

**வசந் :** வணக்கம்.

மைத் : (ஒரு புறமாக வந்து) என்ன இருந்தாலும் தாசியின் குணம் எங்கே போகும்? ரத்தின மாலை போதாதென்று இன்னும் எதையோ பறிப்பதற்காக இன்று மாலை அங்கே வரப் போகிருள்; சாருதத்தர் இந்த விலைமாதின் உறவை விட்டு விடுவதுதான் உசிதம்.

[போகிருன்; தோழி வருகிருள்; வசந்தசேனையிடம் சென்று வணங்குகிருள்.]

தோழி : அம்மா! இன்றைக்கு வானம் இருண்டிருப்பதைப் பார்த்தால் அகாலத்தில் மழை வரும்போலிருக்கிறதே!

வசந் : வரட்டும்; மேகங்கள் எல்லாம் கவிந்து இருள் நிலைக்கட்டும்; மழை விடாமல் பெய்யட்டும்; இவற்றுலெல்லாம் கணவனைத் தேடிச் செல்லும் மனத்தைத் தடுத்து நிறுத்த முடியாது; இன்பத்தில் திளைத்த உள்ளம் இடையூறுகளைப் பொருட்படுத்தாது; புறப்படு, போகலாம்!

[போகிருர்கள்.]

## காட்சி—17

[நந்தவனம்; சாருதத்தன் ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் உலாவிக்கொண்டிருக்கிருன்; மைத்திரேயன் வருகிருன்.]

சாரு : மைத்திரேயா! வந்துவிட்டாயா! இன்னும் வரவில்லையே என்று....

மைத் : ஆகாயத்திலே தேடினையாக்கும்!

சாரு : மழை வரும்போலிருக்கிறதே என்று பார்த்தேன் நீ போன காரியம் ?

மைத் : பெரிய நஷ்டம்!

சாரு : நஷ்டமா? மாலையை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாளா?

மைத் : மறுத்திருந்தால் லாபமாச்சே; வாங்கிக்கொண்டு விட்டாள்! அதிர்ஷ்டம் நமக்கு விரோதி சாருதத்தா! மாலையைக் கண்டதும் கும்பிடு போட்டு வாங்கிக் கொண்டாள்.

சாரு : நல்லதாயிற்று; இதனால் நமக்கென்ன நஷ்டம்?

மைத் : திரவிய நஷ்டம்! உதவாக்கரை நகைகளை யாரோ திருடன் கொண்டு போனால்—அவற்றிற்குப் பதிலாக விலை உயர்ந்த ரத்தின மாலையை நம்மிடமிருந்து இவள் பறித்துக்கொண்டாளே—இதைவிட நமக்கு நஷ்டம் வேறு என்ன வேண்டும்?

சாரு : மைத்திரேயா மாலையைக் கொடுத்தது விலை மதிப்பைக் கருதியல்ல; நம்பிக்கையை உத்தேசித்து!

மைத் : எந்த உத்தேசமாக இருந்தாலும் எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை; அந்தத் தாசி பெரிய சாகசக்காரி; வடிகட்டின லோபி; என்னை ஏதாவது சாப்பிடு என்றுகூடச் சொல்லவில்லை; ரத்தின மாலையைச் சந்தோஷமாக வாங்கிக்கொண்டு 'போய் வாருங்கள்' என்று அனுப்பி விட்டாள்.

சாரு : நீ அவளை பூர்ணமாக அறிந்துகொள்ளவில்லை.

மைத் : நான் அறிந்திராவிட்டாலும், பெரியோர்கள் நன்றாக அறிந்திருக்கிறார்கள். அவர்கள் என்ன சொல்லியிருக்கிறார்கள்—தெரியுமா?

"கிழங்கில் உண்டாகாத தாமரை, வஞ்சகம் இல்லாத வியாபாரி, லோப குணமற்ற தாசி, இவை யாவும் உல

கத்திலேயே அபூர்வம்" என்று சொல்லி யிருக்கிறார்கள்; இனி மேல் இந்தத் தாசியின் சகவாசம் வேண்டாம்; விட்டுவிடு; தாசியின் சிநேகம், செருப்பிலே புகுந்த கல்லைப் போல் நீக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும்.

இன்னும் பார்; எந்த இடத்திலே—தாசி, யானை, காரியஸ்தன், சந்நியாசி, அற்பப் பயல், கழுதை இவை யெல்லாம் இருக்கின்றனவோ அங்கெல்லாம் துஷ்டன் கூட முன்னுக்கு வருவதில்லை. ஆகையால், அவள் நட்பை அறவே விலக்கி விடு.

சாரு : (பெருமூச்சு விட்டு) மைத்திரேயா! நான் என்ன அவளை விலக்குவது? என் நிலையே அவளை விலக்கி விட்டதே! பணம் அற்றபோதே சகலமும் அற்றுவிடும் அல்லவா?

மைத் : பெருமூச்சு விடாதே சாருதத்தா! ஒரு நற்செய்தி கொண்டு வந்திருக்கிறேன்; இன்று மாலை அவள் இங்கே வரப் போகிறாள்; உன்னிடம் சொல்லச் சொன்னாள்; அந்த ரத்தின மாலையால் திருப்தி அடையாமல், இன்னும் எதையாவது வாங்கிப் போக வருகிறாளோ என்று நினைக்கிறேன்; சரி; மழை வரும்போலிருக்கிறது; வா; ஒரு புறமாகப் போவோம்.

[வேறொரு பக்கம் போகிறார்கள்; கும்பீலகன் பாடிக்கொண்டே வருகிறான்.]

கும்பீலகன் : (பாட்டு)

மழை வந்தாலே முதுகு காட்டுவேன்—கடவுளே
மனத்துக்குள்ளே குளிரை ஓட்டுவேன்......
ஏழு துளை குழலை ஊதுவேன்—கடவுளே
ஏழு நரம்பில் வீணை மோதுவேன்......

கழுதை தோற்கும் கானம் பாடுவேன்—கடவுளே
காலில் 'கெஜ்ஜை' கட்டி ஆடுவேன்......

[மைத்திரேயனும் சாருதத்தனும் அங்கிருப்பதைப் பார்த்து]

கும் : நான் வந்திருக்கிறது கூடத் தெரியாமெ அங்கே எங்கேயோ பார்க்கிருரே! ஓ, இந்தக் கல்லைப் போட்டுப் பார்க்கிறேன்.

[சிறு கற்களை எடுத்து மைத்திரேயன் பேரில் விட்டெறிகிருன்.]

மைத் : சாருதத்தா! இதென்ன கல்? (கும்பீலகன் இருக்கும் திசைக்கு வேறு திசையில் பார்த்து) யாரடா! அவன்? வீதியிலே இருக்கிற விளாம்பழம் என்று நினைத்தாயா? என்னையா கல்லால் அடிக்கிருய்?

சாரு : மைத்திரேயா! மேலே விளையாடுகிற புருக்கள் போட்டிருக்கும்.

மைத் : (மேலே பார்த்து) ஏ, புருக்களே! பழுத்த கனியைத் தட்டுவதைப் போல—இதோ—இந்தத் தடியால் உங்களைத் தட்டி வீழ்த்தப் போகிறேன்.

[தடியை எடுக்கிருன்.]

சாரு : அவற்றைக் கலைக்காதே; ஜோடியாயிருக்கின்றன.

கும் : அட, என்ன மனிசன்! என்னைப் பார்க்காமே புருவைப் பார்க்கிருனே! இன்னொரு கல்லைப் போடறேன்!

[மற்ருெரு கல்லை எடுத்துப் போடுகிருன்.]

மைத் : (திரும்பிப் பார்த்து) ஓ, கும்பீலகனு! வா வா! என்ன சேதி?

கும் : நீயே இங்கே வா ! சங்கதியைச் சொல்றேன்.

மைத் : (அவன் அருகில் சென்று) உம், சொல்லப்பா !

கும் : ஒரு கேள்வி கேட்கிறேன்; பதில் சொல்வியா ?

மைத் : ஆயிரம் கேள்வி வேண்டுமானாலும் கேள் !

கும் : எந்தக் காலத்தில் மாமரம் பூத்திருக்கும் ?

மைத் : இது தெரியாதா ! மழைக் காலத்தில்.

கும் : (சிரித்து) இல்லை.

மைத் : இரு இரு, சொல்லுகிறேன். (சாருதத்தனிடம் போய் ரகசியமாக) மாமரம் எப்போது பூத்திருக்கும் ?

சாரு : வசந்த காலத்தில்.

மைத் : (கும்பீலகனிடம் வந்து) வசந்த காலத்திலே மா மரத்தில் மலர் இருக்கும்.

கும் : சரி, இன்னொரு கேள்வி; நல்ல ராஜாவை எது காப் பாத்தும் ?

மைத் : நடுத் தெருதான் நல்ல அரசனைக் காக்க வல்லது.

கும் : தப்பு ! தப்பு ! !

மைத் : (சாருதத்தனிடம் சென்று கேட்டு வந்து) சேனை அப்பா, சேனை !

கும் : சரி, இப்பொழுது இரண்டையும் சேர்த்துச் சொல்லு !

மைத் : சேனை, வசந்தம்—சேனா வசந்தம்.

கும் : அட, திருப்பிச் சொல்லையா !

மைத் : (திரும்பி நின்றுகொண்டு) சேனா வசந்தம் !

கும் : அட, பதங்களை மாத்திச் சொல்லையா.

மைத் : (கால்களைத் திருப்பி வைத்து) சேனு வசந்தம்!

கும் : நல்ல மனிசன் ஐயா நீ! காலிலே இருக்கிற பாதம் இல்லெ ஐயா! அந்த வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லையா!

மைத் : (யோசித்து) வசந்த—சேனை....ஓ, வசந்தசேனை! என்ன அவளுக்கு?

கும் : வந்துகிட்டிருக்காங்க; ஐயாகிட்ட சொல்லச் சொன்னுங்க.

மைத் : சாருதத்தா! சாருதத்தா! வா வா! இங்கே வா! (சாருதத்தன் அருகில் வந்த பின்) வசந்தசேனை வந்து கொண்டிருக்கிறுள்; ஆனைக்கு முன்னுல் வரும் மணி யோசையைப் போல—இதோ பார், இவன் செய்தி கொண்டு வந்திருக்கிறுன்.

சாரு : சந்தோஷம், கும்பீலக! வெறுங் கையோடு போகாதே! இந்தா உத்தரீயம்!

[தன் உத்தரீயத்தைக் கொடுக்கிறுன்.]

கும் : மகராஜன் நல்லாயிருக்கணும்; வணக்கம், போய் வாரேன்!

[போகிறுன்.]

மைத் : சாருதத்தா! இந்த மழையிருட்டு வேளையிலே அந்த மாயக்காரி எதற்காக வருகிறுள்—தெரியுமா? அந்த ரத்தினமாலை, தன் ஆபரணங்களின் விலை பெறுது என்று சொல்லி, இன்னும் எதையாவது பெற்றுப் போகத்தான்!

**சாரு :** ஆம்! மகிழ்ச்சியுடன்தான் திரும்புவாள்.

[வசந்தசேனை தோழியுடன் வருகிருள்; மறைவில் நின்று சாருதத்தன் பேரில் ஒரு மலரை வீசி எறிகிருள்; சாருதத்தன் திரும்பிப் பார்க்கிருன்.]

**சாரு :** ஆ, வசந்தசேனை! மைத்திரேயா! மைத்திரேயா!! இதோ, வந்துவிட்டாள் வசந்தசேனை!

[வசந்தசேனை அருகில் வருகிருள்.]

**வசந் :** என்ன சூதாட்டக்காரரே! இந்த மாலை வேளையிலே இம்மலர்ச் சோலை மனோரம்மியம் அளிக்கிறதா!

**சாரு :** ஆம்; நீ இங்கே வந்ததால்! வாசந்தீ! நீ இல்லாத ஒவ்வொரு மாலைக்கும் இரவுக்கும் என் பெருமூச்சைத் தான் பரிசளித்தேன். இந்த அந்தி வேளை என் சோகத்துக்கே முடிவு கட்டிவிட்டது. வா, வா. உட்காரு; (ஒரு மேடையின்மீது இருவரும் உட்காருகின்றனர்.)

**மைத் :** இந்தச் சந்திரன் இல்லாத இரவிலே, மழையைக் கூடப் பொருட்படுத்தாமல் இவ்வளவு தூரம் வந்திருக்கிறீர்களே?

**தோழி :** ஆமாம்; ரத்தின மாலை என்ன விலை என்று கேட்க வந்திருக்கிறோம்.

**மைத் :** அப்படிச் சொல்லு; நான் நினைத்தது சரியாகிவிட்டது. உம்; எதற்காக விலை தெரிய வேண்டுமோ?

**தோழி :** அம்மாள் அந்த மாலையை மறதியாகத் தன்னுடையதென்று கருதிச் சூதாட்டத்திலே பந்தயம் வைத்துத் தோற்றுவிட்டார்கள். அதை எடுத்துச் சென்றவனையும் கண்டு பிடிக்க முடியவில்லை.

மைத்: ஓ! சொன்ன பாடத்தை அப்படியே ஒப்புவிக்கிறீர்கள் போலும்!

தோழி: அந்த ரத்தின மாலையைத் தேடி மீட்டுக்கொண்டு வரும் வரையில் பதிலுக்காக இந்த சுவர்ண பாத்திரத்தை வைத்துக் கொள்ளுங்கள்.

மைத்: (தங்கப் பானையைப் பார்த்து) இது....

தோழி: முன்னால் பார்த்தாற்போல் இருக்கிறதோ? கூர்ந்து கவனிக்கிறீர்களே?

மைத்: இல்லை இல்லை. அதனுடைய வேலைப்பாட்டைக் கண்டு பிரமிக்கிறேன்.

தோழி: பிரமிக்கவும் வேண்டாம்; ஏமாறவும் வேண்டாம். அதே நகைப் பாண்டந்தான் இது!

மைத்: சாருதத்தா! சாருதத்தா! களவு போன ஆபரணங்கள் அகப்பட்டு விட்டன.

சாரு: (வந்து பார்த்து) மைத்ரேயா! எப்படிக் கிடைத்தது?

(மைத்திரேயன் தோழியின் அருகில் செல்ல, தோழி அவன் காதில் உரைக்கிறாள்.)

சாரு: எனக்குத் தெரியக் கூடாதா?

(மைத்திரேயன் சாருதத்தன் காதில் சொல்லுகிறான்.)

சாரு: (தன் விரலைத் தடவிப் பார்த்து) பாவமே? இந்தத் தாதிக்குக் கொடுக்க ஒரு கணையாழிகூட விரலில் இல்லையே! பணமில்லாதவன் உலகில் உயிர் வாழவே

வேண்டாம்; ஏனெனில், அவன் கோபமும் அருளும் வீணாய் விடுகின்றன. பணமில்லாத மனிதன், இறகற்ற பறவை; உலர்ந்து போன மரம்; நீர் வற்றிய தடாகம்; விஷப் பல்லை இழந்த பாம்பு.

**வசந்:** சுவாமீ! இந்த மாலையை அளித்து என்னை இப்படி அவமதிக்கலாமா?

**சாரு:** காரணம் அதுவல்ல; வறுமை; வறியன் உண்மை கூறினாலும் எவனும் நம்ப மாட்டான் அல்லவா?

**தோழி:** ஐயா! மைத்திரேயரே! உமது வெள்ளை மனத்துக்கு ஒன்றுமே எட்டுவதில்லை போலும்!

**மைத்:** யார் சொன்னது வெள்ளையுள்ளம் என்று? நான் மகா சாமர்த்தியசாலி—தெரியுமா?

**தோழி:** தெரிந்துதான் சொல்லுகிறேன். வாரும் அப்படி வெளியே போய் வருவோம். அங்கே பேசுவோம் உமது சாமர்த்தியத்தைப்பற்றி!

[இருவரும் போகிறார்கள்; மழை தூறல் போடுகிறது.]

**வசந்:** வருணனுக்கு நம் மீது கோபம் வந்துவிட்டது; வருஷிக்கத் தொடங்கிவிட்டான்.

**சாரு:** கவலைப்படாதே; மன்மதன் பொழியும் கருணை மாரி, இந்த முகில் மாரியை வென்றுவிடும்.

**சாரு:** (பாட்டு)

**எழில் பொழியும் முகம் கமலமே—அதில் மலர்ந்த**
**விழிகள் இரண்டு நீலோற்பவமே......**

வசந் :
அழிவிலது என் ஆனந்தமே

சாரு :
அதுவும் என் சொந்தமே

வசந் :
அமர ருலகைப் புவியிலமைத்து
இமைக்கும் பொழுதும் பிரிவைத் தடுத்து
ஆடுவோம்—மதன்—ஓடவே

இருவரும் :
பிரேமைக் கடல் ஆழமே—அதன்
பெருமையில் ஜகம் வாழுமே......
பிரேமைக் கடல் ஆடிய பின்
பிரிந்திடிலே பிழைப்பரோ—
பிறி தொன்றை நினைப்பரோ......

[பாட்டு முடிந்த பின்]

சாரு : வசந்தசேனு! மிகவும் இருட்டிவிட்டது!

வசந் : ஆமாம்! தங்கள் இல்லம் சென்று, அங்கே உள்ள அன்புத் தெய்வத்தைக் கண்டு வணங்க வேண்டும்; வாருங்கள்!

[போகிருர்கள்.]

## காட்சி—18

*[சிறைச்சாலை; ஆரியகன் வியாகுலத்துடன் தன் நிலையை நினைந்து வருந்திக்கொண்டிருக்கிருன்.]*

ஆரியகன் : விதியே! கொடிய விதியே! ஏன் எனக்கு விரோதியாகி என்னை இப்படி வதைக்கிருய்? அடே பாலக! நீ பாலகன் அல்ல; பயங்கரப் பாதகன்; அரச

னல்ல; அகதிகளைத் துன்புறுத்தும் அந்தகன்; உன்னைச் சூழ்ந்திருப்பது நீதியல்ல; என்றைக்கும் அழியாத—நீ இறந்த பின்னும் உன்னை விட்டு அகலாத—அபக்யாதி! பாவி! யாரோ வழியிலே போகிற துறவியின் சொல்லை நம்பி, நான் உன்னுடைய பதவிக்கு வரப் போவதாகப் பயந்து—என்னைக் காவலில் வைத்திருக்கிறாயே; நிர பராதியான என்னைப் படாத பாடு படுத்தி வைக்கிறாயே; இந்தப் பாதகங்களுக்கெல்லாம் பகவான் முன்னிலையில் நீ என்ன பதில் சொல்லப் போகிறாய்? இதனால் உனக்குக் கிடைக்கப் போகும் நரகத்தினின்றும் எவ்வாறு மீளப் போகிறாய்?

[தூங்கும் காவலாளிகளைப் பார்த்து]

காவலாளிகள் தூங்குகிறார்கள்; உலகமே தூங்கு கிறது. என்னை இந்த விதிக்கு உள்ளாக்கிய கடவுள் கூடத் தூங்குகிறார் போலும். (யாரோ ஒருவன் தன்னை நெருங்கி வருவதைப் பார்த்து) யார் அங்கே வருவது? (அருகில் வந்தபின்) ஆ....சர்விலகன்!

**சர்விலகன்:** ஆரியக! உன் செய்தியை இப்பொழுது தான் அறிந்தேன்; ஓடி வந்தேன்; உனக்கு விடுதலை மட்டுமல்ல; ராஜ்யமே கிடைத்துவிட்டதென்று நினைத் துக்கொள்.

**ஆரி:** ஐயோ! காவலாளிகள் இருக்கிறார்களே—பார்த்து விட்டால்?

**சர்:** பயப்படாதே! கனக சக்தியின் களவு நூல்-யோகா சார்யரின் மாய குளிகை - பிறர் கண்ணிலே தென்படாது மறைக்கும் அஞ்சனம், நான் விட்டாலும் என் கையை விடாத கருணை நிரம்பிய கன்னக்கோல் இவை இருக்கை

யில் இந்தக் காவலரும் கடுஞ்சிறையும் எனக்கு எம்மாத் திரம்? இதோ—இரும்புக் கம்பிகளை அறுத்தெறி கிறேன்..........

[சிறைச்சாலையின் கம்பிகளை ஆயுதங் கொண்டு அறுக்கிறான்; காவலாளி கள் விழித்துக்கொள்ள அவர்கள் நாசியிடம் மயக்க மூலிகை காட்டு கிறான். அவர்கள் மூர்ச்சையடை கின்றனர். சூர்யோதயத்தால் ஏற் படும் கலகலப்பு நகரமெங்கும் தோன்றுகிறது. கம்பியும் அறு பட்டு விழுகிறது.]

சர்: ஆர்யக! சூரியன் உதித்துவிட்டான். பகலவன் எனது பகைவன். நான் மறைய வேண்டும். நீ எப்படி யாவது தப்பி ஓடிவிடு.

ஆரி: சர்விலக! காலில் விலங்கு இருக்கிறதே! என்ன செய்யட்டும்?

சர்: பயப்படாதே; ஊரெல்லாம் உன் பக்கம் போகிறது; எவனும் உன்னைக் காட்டிக் கொடுக்க மாட்டான். அதோ—கதிரவனின் காலைக் கிரணம். இனி நான் இங் கிருக்கக் கூடாது. நீயும் மறைந்து மறைந்து மெல்லப் போய்விடு.

[சர்விலகன் ஓடிவிடுகிறான். காலில் விலங்குடன் ஆரியகனும் மெல்ல மெல்ல நடக்கிறான்.]

## காட்சி—19

*[சாருதத்தன் வீடு; சாருதத்தன் 'மாதவிகை' என்னும் பணிப் பெண்ணைச் சந்திக்கிறான்; அதிகாலை]*

**சாருதத்தன்:** மாதவிகே! வசந்தசேனை இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாள்; எழுந்த பிறகு நமது வண்டியில் ஏற்றி, 'புஷ்பகரண்ட' உத்தியான வனத்துக்கு அனுப்பு; நான் அங்கிருப்பேன்.

**மாதவிகை:** உத்திரவு.

[சாருதத்தன் போகிறான்; மாதவிகை வசந்தசேனை தூங்கும் அறையின் அருகில் போய் நிற்கிறாள்]

**மாத:** அம்மா! அம்மா! எழுந்திருங்கள்; பொழுது விடிந்து விட்டது.

[வசந்தசேனை விழித்தெழுந்து வெளியே வருகிறாள்.]

**வசந்:** உங்கள் சூதாட்டக்காரர் எங்கே?

**மாத:** புஷ்பகரண்ட உத்தியான வனத்திற்குப் போயிருக்கிறார்; தங்களை வண்டியில் ஏறி அங்கே வரச் சொன்னார்.

**வசந்:** அப்படியா? சரி, நீ போய் வர்த்தமானகனை வண்டியுடன் வரச் சொல்!

**மாத:** கட்டளை!

[போகிறாள்; ரதனிகை, கையில் ஒரு மண் வண்டியை எடுத்துக் கொண்டு ரோஹசேனனுடன் வருகிறாள். ரோஹசேனன் பிடிவாதமான குரலில் அழுதுகொண்டிருக்கிறான்.]

ரத: (ரோஹஸேனனைப் பார்த்து) என் கண்ணே இல்லையோ! ராஜாவாச்சே நீ! சொல்றதைக் கேளு! இந்த மண் வண்டியை வைத்துக்கொண்டே விளையாட லாம், வா!

ரோஹஸேனன்: (அழுதுகொண்டே) முடியாது..எனக்கு அதே மாதிரி பொன் வண்டிதான் வேணும்....ஊ....ஊ....

ரத: பொன்னும் வெள்ளியும் நம்மிடம் இப்போது ஏது குழந்தே? அப்பாவுக்கு எப்போதாவது நிறைய பணம் வந்தால், அப்போது பொன் வண்டி வைத்துக்கொண்டு விளையாடலாம்.

[மறுபுறம் திரும்பி வசந்தசேனை அங்கே இருப்பதைப் பார்த்து]

அம்மா! வணக்கம்!

வசந்: ரதனிகே! இவன் யாருடைய குழந்தை?

ரத: சாருதத்தருடைய புதல்வன் அம்மா! ரோஹஸேனன்!

வசந்: (கைகளை நீட்டி) வாடா கண்ணே! என்னிடம் வா! (வாரி யெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு) தந்தை யின் வடிவம் அப்படியே பொருந்தி யிருக்கிறது.

ரத: வடிவம் மாத்திரமே அல்ல; குணம்கூட அப்படியே தான். சாருதத்தருக்கு இவன் பேரில் உயிர்.

வசந்: ஆகையால் எனக்குந்தான்! இப்பொழுது எதற் காக அழுகிறான் ரதனிகே?

ரத: அடுத்த வீட்டுப் பையன் ஒரு பொன் வண்டியை வைத்து விளையாடிக்கொண்டிருந்தான்; இவன் அதைக் கேட்டான்; உடனே நான் இந்த மண் வண்டியைச் செய்து கொடுத்தேன்; இந்த மண் வண்டி வேண்டாம்

அதைப் போலவே பொன் வண்டி வேண்டும் என்று அழுகிருன்.

வசந்: ஆஹா! விதியின் சோதனையை என்னவென்று சொல்வது?....(ரோஹசேனனைப் பார்த்து) ரோஹசேனு! அழாதே; நான் செய்து கொடுக்கிறேன்—உனக்குப் பொன் வண்டி!

ரோ: ரதனிகே! இந்த அம்மா யார்?

வசந்: குழந்தாய்! நான் உன் தகப்பனுரின் குணங்களுக்கு அடிமையான தாசி.

ரத: ரோஹசேனு! இந்த அம்மாள் உனக்குத் தாயார் முறை.

ரோ: பொய்; பொய்; என் தாயார் என்கிருயே—இவர் நகையெல்லாம் போட்டுக் கொண்டிருக்கிருரே?

வசந்: ஆஹா! எவ்வளவு அழகாகப் பேசுகிருயடா?—இள முகத்திலே கருணை வழிய? (ஆபரணங்களைக் கழற்றிக் கண்ணீர் விட்டு) இதோ பார்; உன் அம்மாள் ஆகிவிட்டேன்; இந்தா—இந்த நகைகளை வைத்துத் தங்க வண்டி செய்து கொள்.

ரோ: எனக்கு வேண்டாம்; நீதான் அழுகிருயே!

வசந்: (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) இல்லை. அழவில்லை. எங்கே அந்த மண் வண்டி? (மண் வண்டியை வாங்கி அதற்கு அணிகளைப் பூட்டி) உம் பார்த்தாயா? இப்பொழுது பொன் வண்டி ஆகிவிட்டது; வைத்து விளையாடிக் கொள்.
(ரோஹசேனனிடம் கொடுத்த பின்பு, தன் கழுத்திலுள்ள ரத்தினமாலையைக் கழற்றி)

ரதனிகே! இந்த மாலையை என் சகோதரி தூதையிடம் கொடுத்துவிடு; நான் சாருதத்தரின் குணங்களுக்கு எப்படி அடிமையோ, அப்படியேதான் தூதை அம்மாளுக்கும் அடிமை என்று சொல்; ஆதலால் இந்த மாலை அந்த அம்மாளின் கழுத்திலேயே இருக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொண்டதாகச் சொல்.

ரத: அம்மா! தூதையம்மை, இவ்விஷயத்தைப்பற்றி ஏற்கனவே சொல்லியனுப்பியுள்ளார் என்னிடம்!

வசந்: என்னவென்று?

ரத: திருப்பி வாங்கக் கூடாதென்று; சாருதத்தர் இதனைத் தங்களுக்குக் கொடுத்து விட்டதால் மீண்டும் தங்களிடமிருந்து இதனைப் பெறுவது முறையல்லவாம். மேலும் சாருதத்தரே தமக்குச் சிறந்த ஆபரணம் என்றும் சொன்னார்.

மாத: (வந்து) அம்மா! வர்த்தமானகன் வண்டிகொண்டு வந்திருக்கிறான்; தாங்கள் புறப்படலாம்.

வசந்: இதோ வருகிறேன்.

[எல்லோரும் போகிறார்கள்]

## காட்சி—20

[சாருதத்தனின் வீட்டை அடுத்த ராஜபாதை; வர்த்தமானகன் வண்டியுடன் காத்திருக்கிறான்.]

வர்த்தமானகன்: அட, எம்மாத்தம் நாளி ஐயா வீட்டை விட்டுக் கிளம்பறதுக்கு? இந்தப் பொம்பளிங்க சமாசாரமே இப்படித்தான்; அட, ஒருத்தரைச் சொல்லுவானேன்? நம்ம பொஞ்சாதி சங்கதிகூட இப்படித்தான்;

அட, வண்டி வந்து நின்ன பிறகுதானு முகத்தை அலம்பப் போகணும் ? அட, அந்த மூஞ்சியிலே என்ன இருக்குதோ — சும்மா தேய்ச்சுத்தேய்ச்சுக் கழுவறூங்க ! அட, அதுக்கப்புறம்—பொட்டைப் பார்க்கணும் ; கட்டைப் பார்க்கணும்; உடையைப் பார்க்கணும்; நடையைப் பார்க்கணும்; இப்படி எத்தனை இருக்கல்லே ? அட, சும்மாவா சொல்லியிருக்கு வஜனம் "பொம்பளை கிளம்பறதுக்கும் பொழுது சாயுறதுக்கும் சரியாயிருக்கு"மின்னு ! (வண்டிக்குள் பார்த்து) : அட ! கம்பளியை விரிச்சிட்டு வர மறந்துட்டேனே ! ஆம்பிள்ளையானலும் சரியாய்ப் போயிடும். பொம்பிள்ளையை வெற்று வண்டியிலே குந்த வைக்கிறது மரியாதைக்கு குறைவு இல்லே ? அட ! "சிட்டி சிங்காரிக்கிறதுக்குள்ளற பட்டினம் பாளாய்ப் போயிடும்"னு, அந்த அம்மா அசைஞ்சு வர்ரதுக்குள்ளற—நான் அஞ்சு தடவை போயிட்டு வந்துடுவேன் ....னு ! உம் (யோசித்து) அதுதான் சரி. திரும்பிப்போய் கம்பளியை விரிச்சிகிட்டு வந்துட்றேன். ஹை ! ஹை ! (வண்டியை ஓட்டிக்கொண்டு போகிறுன்).

[சகாரன் வண்டிக்காரனுன ஸ்தாவரகன் வண்டியை ஓட்டி வருகிறுன்.]

**ஸ்தாவரகன் :** (மாடுகளை ஓட்டி) ஹை ! ஹை! என்ன புது மாப்பிள்ளையைப் போல நடக்கறயே ? இப்படி நடந்தா—எப்போ போய்ச் சேர முடியும் ? உம் ; காலை வீசி நடடா தம்பி ! ஓ ! வண்டி கிண்டி எதிரிலே வரும்னு பார்க்கிறயா ? (திரைக்குள் பார்த்து) அடடா ! யாரடா அவன் வண்டியை பாதையிலே குறுக்க நிறுத்திட்டான்?

டேய்! நாட்டுப்புறம்! ஓட்டடா வண்டியை அப்பாலே! என்னை யாருன்னு நினைச்சுகிட்டே? ராஜா மச்சுனன் இல்லெ — ராஜா மச்சுனன்—சகாரன்—அவருடைய வண்டியோட்டி யாக்கும்; தெரியுமா? என் வண்டிக்கு எதிர் வண்டி வரக்கூடாது. ஓ! எங்கே போறேன்னு கேக்கறயா? புஸ்ப பொரண்டை வனத்திலே—நம்ம எசமான் அப்படி விளையாட்டு நடத்தறத்துக்காக வந்திருக்கிறாரு; அதுக்காகத்தான் வண்டி அங்கே போவுது - தெரியுமா? உம்! விலகுடா; விலக்கு உன் வண்டியை! அட பாவமே! சக்கரத்தைத் தூக்க முடியலியா உன்னாலே? அதுக்காக—என்னைக் கொஞ்சம் கூடம் பிடிச்சு தூக்கு என்கிறாயா? அடேய்! என்னை யாருன்னு நினைச்சே? சகாரனுடைய வண்டியாள்—ஸ்தாவரகன் நான்! உன் வண்டியின் சக்கரத்தைப் பிடிச்சுத் தூக்குவேணு? போடா போ....(யோசித்து) பாவம்! தனியாகக் கஷ்டப்படுகிறான். இந்த வண்டியை—சாருதத்தர் வீட்டண்டை நிறுத்திட்டு—அங்கே போய் சக்கரத்தைத் தூக்கிட்டு வர்ரேன்!

[வண்டியை நிறுத்திவிட்டு திரைக்குள் போகிறான்]

**வசந்தசேனை :** (வீட்டிலிருந்து வெளியே வந்து) ரதனிகே! நான் வண்டியில் ஏறிக் கொள்ளுகிறேன். நீ போ ............

[பின்புறமாக வண்டியில் ஏறிக் கொண்டு, வண்டியின் திரையை மூடிவிடுகிறாள்.]

**ஸ்தாவரகன் :** (வந்து வண்டியிலேறி மாட்டைப் பார்த்து) போடா ராஜா போ! ஸம்மா....கும்கும்மின்னு போகணும்...எங்கே? (ஓட்டிப் போகிறான்) "ஹை! ஹை!"

[ஆரியகன் காலில் விலங்குகள் ஓசைப்பட மெல்ல மெல்ல நடந்து வருகிறான்]

**ஆரியகன் :** (தனக்குள்) இந்தக் காலிலே விலங்கோடு.... எங்கே போவது—எப்படிப் போவது? என்ன—ஏதோ ஓசை? (சாருதத்தன் வீட்டைப் பார்த்து) இந்த வீடு திறந்திருக்கிறது; உள்ளே நுழைந்து கொள்ளட்டுமா? (உள்ளே நுழைந்து ஒரு மறைவான இடத்தில் நின்று கவனித்து): ஓ! ஏதோ வண்டி வரும் ஓசை. (திரைக்குள் பார்த்து) ஆம்; இந்தப் பக்கம்தான் வருகிறது. அதில் ஏறிக்கொண்டால் ஊருக்கு வெளியில் போய் விடலாம். ஆனல்....எப்படி ஏறுவது?

[வர்த்தமானகன் ரத்தின கம்பளம் விரித்துள்ள, மூடு வண்டியைக் கொண்டு வந்து நிறுத்துகிறான்.]

**வர்த்தமானகன்:** (உரக்க) வாங்க அம்மா! வாங்க! வண்டி எம்மாத்தம் நேரமா காத்துகிட்டிருக்கு—தெரியலே! இந்த மாடு பொல்லாத மாடு; சுறுக்கா வந்து சும்மா பின்னலே ஏறிக் குந்துங்க!

(ஆரியகன் விலங்கு ஓசைப்பட வந்து வண்டியில் ஏறுகிறான்)

**வர்த்த :** சரி; ஏறிட்டிங்களா? உங்க காலிலே கல்லு கல்லு இங்கற சதங்கையைப் போலவே—இந்தக் காளே மாட்டின் கழுத்திலேயும் கல்கல்லின்னு—என்னுமா இருக்கும் அம்முணி? உம். ஹை! ஹை! (ஓட்டிப் போகிறான்)

## காட்சி—21

[நகரின் எல்லைப்புறம்]

[வீரகன் கோபமாய்ப் பிரவேசிக்கிறான்.]

**வீரகன் :** அடே! அடே சந்தகை! வா சீக்கிரம்! அவன் பச்சியாய்ப் பறக்கட்டும்; முயலைப்போல் ஓடட்டும்; எலி யைப்போல் நுழையட்டும். எங்கே போனாலும் சரி; பிடித்துவிடலாம்.

**சந்தனகன் :** (பிரவேசித்து) அடே வீரக! இதுக்குள்ளற ஆரியகன் எங்காச்சும் போய்ச்சொகமா தூங்கிக்கிட்டிருப் பான். நீயும் நானும் கத்திமை உருவிக்கிட்டு நிக்கறது தான் கண்ட மிச்சம். பொறப் படப்பா—வீடு போய்ச் சேரலாம்!

**வீரகன் :** டேய் சந்தகை! நீ எப்பவுமே சுத்த சோம் பேறிடா! ராசா உத்தரவு என்ன தெரியுமா? "ஆரியகனை இன்னிக்குள்ளற கண்டு பிடிச்சே ஆகணும்னு" இல் லாட்டா.......

**சந் :** என்ன — தலை போயிடுமா? இந்த வேலையோடுதானே போகும்? இது என்ன பிழைப்புடா—நாய்ப் பிழைப்பு! நல்ல மனிசனைப் பிடிச்சுக் குடுக்கறது—கெட்ட மனிச னுக்குக் காவல் காக்கிறது....தூ....(காரி உமிழ்கிறான்.)

**வீர :** அடேய்! பாருடா; ஏதோ வண்டி வருது; நிறுத் துடா அதை!

[வர்த்தமானகன் வண்டியை ஓட்டி வருகிறான்]

**சந்தனகன் :** (வண்டியை நிறுத்தி) யாருடையது வண்டி?

**வர்த்தமானகன் :** சாருதத்தருடையது!

சந்த : ஓ! அவருடையதா—சும்மா போ!

வீரகன் : எங்கே போகிறதென்று கேள்!

சந் : ஏ வண்டி! எங்கே போகிறது?

வர்த் : புஷ்பகரண்ட நந்தவனத்துக்கு!

சந் : பேஷாப் போ!

வீர : உள்ளே இருக்கிறது யார் என்று கேள்!

சந் : ஏ வண்டி! உள்ளே இருக்கிறது யார்?

வர்த் : அம்மாள்—வசந்தசேனை!

சந் : அப்படியா? கட்டாயம் போக வேண்டியதுதான். சுலுக்காப் போ!

வீர : டேய்! எவன் வண்டி ஆனால் என்ன—எவள் இருந்தால் என்ன? திரையை விலக்கி உள்ளே பாருடா!

சந் : டேய்! வீரக! சேனாதிபதி ஆயிட்டேன்னு சட்டம் பேசாதே; சாருதத்தர்—வசந்தசேனை என்றால் கூடவா உனக்குச் சந்தேகம்?

வீர : எனக்குச் சந்தேகமில்லை. ராசா உத்தரவுக்குச் சந்தேகம். வண்டிக்குள்ளே எட்டிப் பார்—யாரென்று!

சந் : (வண்டிக்குள் பார்த்து ஆரியகனைக் கண்டு வியப்படைந்து) டேய்! டேய்! ஆர்ய........ (சமாளித்துக் கொண்டு) இல்லை ஆர்ய வசந்தசேனையடா! உம்; விடுடா வண்டியை!

வீர : டேய்! நிறுத்துடா வண்டியை.

சந் : ஏன்?

வீர : நான் பார்க்க வேண்டும்!

சந் : நான்தான் பார்த்து ஆச்சேடா?

வீர : அதனால்தான் !

சந் : அப்படின்னு—என்னிடம் நம்பிக்கையில்லையா ?

வீர : உன்னிடம் நம்பிக்கைதான் ; உன் வார்த்தையில் இல்லை. நீ திக்கித் திக்கிச் சொன்னாய் ! முதலில் ஆரியக .....என்று ஆரம்பித்து வசந்தசேனை என்று முடித்தாய் !

சந் : அதுதாண்டா—"ஆரிய வசந்தசேனை"ன்னு அழகாச் சொன்னேன் !

வீர : தவிர, நீ சர்விலகனுக்கு வேண்டியவன். சர்விலகன் ஆரியகன் கட்சியில் சேர்ந்தவன். ஆகையால் வண்டியை நானும் பார்த்து விடுகிறேன்.

சந் : கூடாது ; நான் சோதனை போட்ட வண்டியை நீ மறுபடியும் சோதனை போட்றது எனக்கு அவமானம் !

வீர : போடா போ—நீ யாரடா என்னைக் கேட்கிறவன் ? என் இஷ்டம் ! டேய் வண்டிக்காரா ! திருப்புடா வண்டியை ! நான் பார்க்கணும் !

[வர்த்தமானகன் வண்டியைத் திருப்ப, வீரகன் பார்க்கச் செல்கையில் சந்தனகன் அவனது தலையைப் பிடித்து இழுத்துத் தள்ளி உதைத்து அடிக்கிறான்]

வீர : (துக்கமும் கோபமும் பொங்க) டே பயலே ! அசந்திருக்கையிலே என்னை அடிச்சுட்டே ! ஆகட்டும் நியாய ஸ்தலத்திலே பேசிக்கிறேன்.

சந் : அதுக்கு மேலே ஒரு ஸ்தலம் இருந்தா—அங்கே போய்க்கூடப் பேசிக்கோடா—போடா !

(வர்த்தமானகனிடம் வந்து) ஏ வண்டீ! பயப்படாமே ஓட்டிகிட்டுப் போ! யாராச்சும் கேட்டால், சந்தனகன் சோதனை போட்ட வண்டி...ன்னு சொல்.

(வண்டிக்குள் பார்த்து) அம்மா! வசந்தசேனே! இந்தா கத்தி! இதை அடையாளமாக வைச்சுக்கோ! என் பெயர் சந்தனகன். நீ ராணியாக வர்ரபோது என்னை மறந்துடாதே! (ஆரியகன் சந்தோஷத்துடன் கத்தியை வாங்கிக் கொள்ள, வண்டி போகிறது)

## காட்சி—22

['புஷ்பகரண்டம்' என்னும் பாழடைந்த தோட்டம். சாருதத்தன் வண்டியை எதிர்பார்த்த வண்ணமிருக்க, மைத்திரேயனும் அருகில் நிற்கிறான்.]

சாரு : மைத்திரேய! வர்த்தமானகன் ஏன் இவ்வளவு தாமதம் செய்கிறான்?

மைத் : அதைத்தான் நானும் கேட்கிறேன்!

சாரு : மாடு நடக்கவில்லையா? அல்லது அச்சு ஒடிந்து போய், சக்கரத்தைத் தூக்கிக் கொண்டிருக்கிறானோ? இல்லாவிட்டால், காளைக்குப் பூட்டும், கயிறு அறுந்து விட்டதா? ஒன்றுமே தெரியவில்லையே!

மைத் : தெரிகிறது; தெரிகிறது.

சாரு : என்ன தெரிந்தது. சீக்கிரம் சொல்.

மைத் : வண்டி தெரிந்தது. தெரிகிறது. தெரிந்து கொண்டும் இருக்கிறது.

சாரு : வண்டியா— எங்கே ?

மைத் : அதோ பார்! [வண்டி வருகிறது]

சாரு : (பார்த்து) ஓ! வசந்தசேனை வந்துவிட்டாள்; மைத்திரேய! போய் வண்டியை விட்டு கீழே இறக்கி அழைத்து வா!

மைத் : அவளுக்கென்ன—காலிலே விலங்கா இருக்கிறது—இறக்கி அழைத்து வர? எல்லாம் தானாக இறங்கி வருவாள்.
(வண்டியின் அருகில் போய் வர்த்தமானகனைப் பார்த்து) என்னடா இத்தனை தாமதம்?

வர்த் : அட போ ஐயா! இன்னிக்கு யார் மூஞ்சியிலே முளிச்சேனோ—எளவு—எதை எடுத்தாலும் ரோதனை யாப் போச்சு; மாடு நடக்கல்லே. சக்கரத்தைத் தூக்கி சரிப்படுத்தி ஓட்டியாந்தனா—அட—எளவு—அந்த வளி யிலே ரெண்டு பேரு ஐயா—எம் பொஞ்சாதியைவிட அதிகமா சண்டைபோட ஆரம்பிச்சுட்டாக! நானு வீட் டுலே இருக்கறதைப் போலவே ஒன்னும் வாயைத் தெறக்காமெ—தப்பிச்சு ஓடியாந்துட்டேன் ஐயா!

மைத் : (வண்டிக்குள் மூடியை நீக்கிப் பார்த்து) சாரு தத்த! சாருதத்த! வசந்தசேனையல்ல; வசந்தசேனன் வந்திருக்கிறான. வா. வந்து பார்!

சாரு : பரிகாசம் செய்யாதே! அவளை நானே இறக்கி விடு கிறேன். (வண்டியில் ஏறிப் பார்த்து) அட யாரிவர்? யார் ஐயா நீர்?

ஆரியகன் : (வணங்கி) என்னை மன்னிக்கவேண்டும். நான் யாதவ குலத்தினன். என் பெயர் ஆரியகன். அரசன் பாலகன் அகாரணமாக என்னைச் சிறையில் இட்டான்.

சாரு : ஆரியகனா நீர் ? எங்கிருந்து வருகிறீர் ?

ஆரி : சிறையிலிருந்து தப்பி ஓடி வருகிறேன். காவலாளி கள் தேடுகிறார்கள். தங்கள் வண்டிதான் என்னைக் காப் பாற்றியது; இதற்குப் பிறகும் தங்கள் கருணைதான் என் னைக் காப்பாற்ற வேண்டும்.

சாரு : கவலைப்படாதீர். வர்த்தமானக! இவர் கால் விலங்கை வெட்டி விடு.

[வர்த்தமானகன் அவ்விதமே செய்ய, ஆரியகன் சாருதத்தரின் காலில் விழுந்து]

ஆரி : கால் விலங்கை வெட்டி விட்டீர்கள்; ஆனால் நட்பு விலங்கால் என்னைப் பிணைத்து விட்டீர்கள். இனி நான் போய் வருகிறேன் !

[வண்டியிலிருந்து இறங்க முயற்சிக் கிறான்]

சாரு : இறங்க வேண்டாம்; வண்டியிலேயே போகலாம்; என் வண்டி என்றால் யாரும் சந்தேகிக்கமாட்டார்கள்.

ஆரி : மிகவும் நன்றி !

சாரு : போய் உறவினரிடம் சேரும்.

ஆரி : தங்களினும் சிறந்த உறவினர் எவருமில்லை பிரபுவே !

சாரு : என்னை மறந்து விடாதீர் !

ஆரி : என்னையே நான் மறக்க முடியுமா ?

சாரு : கடவுள் காப்பாற்றட்டும்—வழியில் !

ஆரி : தாங்கள்தாம் அவர் !

சாரு : பாக்கியங்கள் உமது பங்கில் இருக்கின்றன.

ஆரி : காரணம் தேவரீரே! நல்லது; விடை பெறு கிறேன்.

[வண்டியில் ஆரியகன் போகிறான்.]

சாரு : மைத்திரேயா! இந்த விலங்கை எடுத்துக் கிணற் றில் போடு! நாலா புறமும் அரசனின் ஒற்றர் இருப்பர்; ஜாக்கிரதை!....இதென்ன இடது கண் துடிக்கிறதே! வா போவோம்! (பார்த்து) சே! அபசகுனம்! எதிரில் பௌத்த சந்நியாசி வருகிறான்; திரும்பு, வேறு வழியில் செல்வோம்.

[போகிறார்கள்]

## காட்சி—23

[வேறு ஒரு நந்தவனம்; பௌத்த சந்நியாசியாகி விட்ட ஸம்வாஹகன் வருகிறான்.]

ஸம்வாஹகன் : (பாட்டு)

விழித்தா லன்றோ விடுதலை—மனமே
விழித்தா லன்றோ விடுதலை.........
மெய்த் தியானப் பறை யொலியால் துயிலற (விழித்)

அழித்திடும் ஐந்து இந்திரியக் கள்ளர்
அள்ளிநின் அறிவைக் கொள்ளை கொள்ளாமல்
சித்தத்தை ஒழுங்காய் மொட்டை யிடாமுன்
சிரத்தினை மழுங்க சிரைத்தால் பயனில்லை (விழித்)

சகாரன் : (திரைக்குள்) அடேய்! போக்கிரி பிக்ஷு! நில்லடா நில்!

ஸம் : ஐயையோ! சகாரன் வந்துவிட்டானே! மகா கொடியவன் ஆயிற்றே! யாரோ ஒரு சந்நியாசியின்

பேரில் ஏற்பட்ட பகையின் காரணமாக—எந்தத் துறவியைக் கண்டாலும் மூக்கை அறுத்து விடுகிறுனமே! நான் இப்பொழுது என்ன செய்வேன்? ஹே, பகவான்! பகவான்!

[சகாரன் கத்தியைப் பிடித்த வண்ணம் விரைந்து வருகிறுன். விடனும் அவனுடன் வருகிறுன்']

**சகாரன்** : அடேய்! பிக்ஷு! நில்லுடா! குடிகாரர் முள்ளங்கியைத் திருகுவது போல உன் தலையைத் திருகப் போகிறேன். வா இப்படி.

[அடிக்கிறுன்.]

**விடன்** : சகாரா! விட்டுடு; காவி உடுத்தவனை அடிக்கக் கூடாது.

**ஸம்** : ஆமாம் உபாஸக! தயை செய்யுங்கள்!

**சகா** : பாரு! விட! பாரு! பாரு! என்னை ஏசுகிறுன்!

**விடன்** : ஏசுகிறுனு!

**சகா** : நான் உப்பு யாசகனுமே! அப்படீன்னு—பிச்சை எடுக்கிறவனு?

**விடன்** : அப்படியல்ல அப்பா! புத்தோபாஸகன் என்று உன்னைப் புகழ்கிறுன்—துதிக்கிறுன்.

**சகா** : அப்படியா! டேய் பிக்ஷு; துதி. நன்றுகத் துதி.

**ஸம்** : நீயே தன்யன்; நீயே புண்யன்.

**சகா** : டேய்! யாரடா தன்யன்; புண்யன் இதெல்லாம்? நான் என்ன சாருவாகனு? இல்லை—கோஷ்டகனு? அல்லது கும்பகர்ணனு? மரியாதையாகச் சொல்லி விடு; இங்கே எதற்காக வந்தாய்?

ஸம் : இந்தக் காவித் துணியைக் குளத்திலே கசக்கிப் போக வந்தேன்.

சகா : அடேய்! என் அக்காளின் அகமுடையானை அரசன் எனக்குக் கொடுத்த இந்த நந்தவனத்தில்—நாய் நரிகளைத் தவிர எந்த மனிதனையும் நான் உள்ளே விடுவதில்லை. நான்—அதாவது இந்த மன்மதன் கூட இங்கே குளிப்பதில்லை. அப்படியிருக்க உன்னுடைய அழுக்குப் பிடித்துத் துர்நாற்றம் வீசுகிற இந்தக் காஷாயத்தை அலசி—திருக்குளத்தையே கலக்கி விட்டாயே! என்ன தைரியம் உனக்கு? அதற்காக வெகுமதி உனக்கு (அடிக்கிறான்). இதுதான்! இதுதான்! இதுதான்!

ஸம் : புத்தம் சரணம் கச்சாமி! தர்மம் சரணம் கச்சாமி!

விடன் : சகார! பொறு. பொறு. இவன் பரம்பரை ஆண்டியல்ல; பஞ்சத்தில் ஆண்டி. இப்பொழுதுதான் சந்நியாசி ஆனவன்.

சகா : எப்படித் தெரியும் உனக்கு?

விடன் : இதோ பார்—தலை மொட்டை இன்னும் பழசு படவில்லை; தோளிலே காஷாயத்தைக் கட்டின தழும்புகளும் இல்லை; ஆடைக்குக் காவியூட்டி அழகாக உடுக்கவும் தெரியவில்லை.

ஸம் : உண்மைதான் உபாஸகரே! சமீப காலத்தில்தான் சந்நியாசி ஆனேன்.

சகா : ஏனடா நீ பிறந்தபோதே சந்நியாசி ஆகவில்லை?

[அடிக்கிறான்.]

விடன் : வேண்டாம் சகாரா! விட்டு விடு; அவன் போகட்டும்.

ஸம் : பகவானே! என்னை விட்டு விடு; நான் போய் விடு கிறேன்.

சகா : அடேய்! நில்லு! யோசிக்கிறேன்.

விடன் : யாரோடு?

சகா : என் மனத்தோடு; ஏ மனமே! நீ சொல்லு! இந்தப் பிக்ஷு இருக்கட்டுமா—அன்றி போகட்டுமா? ஓ! சரி, தெரிந்தது.

விடன் : என்ன அப்பா தெரிந்தது?

சகா ; என் மனம் சொல்றது ; "இவன் போகவும் வேண் டாம்; இருக்கவும் வேண்டாம்; மூச்சுக்கூட விடாமல் இங்கேயே விழுந்து சாகட்டும்" என்று.

ஸம் : நமோ புத்தாய! நமோ புத்தாய!

விடன் : ஐயோ பாவம்! போகட்டுமப்பா!

சகா : போகட்டும்—அதைச் செய்துவிட்டு!

விடன் : எதைச் செய்ய வேண்டும்?

சகா : இந்தத் தண்ணீரைக் கலக்காமல் சேற்றை எடுக்கட் டும்; அல்லது—தண்ணீரை எல்லாம் ஒன்று சேர்த்து சேற்றில் புகுத்தட்டும்.

விடன் : (தனக்குள்) ஐயோ! கஷ்டம்! கஷ்டம்! இந்த மகா மூடர்களை—பொய் மனமும் கல் உடலும் கொண்ட இந்த மாமிச விருக்ஷங்களைப் பூமிதேவி எப்படித்தான் தாங்குகிறாளோ பாவம்!

சகா : டேய் பிக்ஷு! உம்; செய் நான் சொன்னதை!

ஸம்: "கோ" (என்று கூச்சலிடுகிறான்).

சகா : விட! இவன் என்ன சொல்கிறான்?

விடன் : உன்னைக் கொண்டாடுகிறான்.

சகா : பேஷ்; கொண்டாடு. அடேய்! இன்னும் கொண்டாடு.

(ஸம்வாஹகன் கூச்சலிட்டுக்கொண்டே ஓடி விடுகிறான்).

விடன் : சகார! இந்த வனம் எவ்வளவு அழகாயிருக்கிறது—பார்த்தாயா?

சகா : அதோ அந்தக் குரங்குகளைப் பார்! பலாப் பழம் போலத் தொங்குவதை!

விடன் : சகார! வா! இப்படி உட்காரலாம்!

சகா : (உட்கார்ந்து) விட! துஷ்டன் சொன்ன வார்த்தை மாதிரி அது இன்னும் மனத்தை விட்டுப் போக மாட்டேன் என்கிறதே!

விடன் : எது?

சகா : அதுதான்—வசந்தசேனையின் நினைவு!

விடன் : அவளாலே அவ்வளவு அவமானம் கிடைத்தும், இன்னுமா அவள் நினைவு போகவில்லை? உன்னைப் போன்றவருக்கு இது சகஜந்தானப்பா—பெண்களால் அவமானம் அடைய அடைய, அவர்கள் மேல் காமம் அதிகரித்துக்கொண்டே இருக்கும்.

சகா : எவ்வளவு நேரமாச்சு—ஸ்தாவரகனை வண்டி கொண்டு வரச் சொல்லி? இன்னும் வரவில்லையே! வயிறு பசிக்கிறது; என்னால் நடக்கக்கூட முடியவில்லை. அதோ பார் சூரியனை! உச்சிக்கு மேலே வந்து, கோபங்

கொண்ட குரங்கைப் போல கொடுமையாயிருக்கிறான். அவனைக் கண்ணாலே பார்க்கக்கூட முடியவில்லையே !— இந்தப் பூமியைப் பார் ! நூறு பிள்ளைகளைப் பெற்ற காந்தாரியைப் போல் வெம்பித் தவிக்கிறாள்.

விடன் : ஆமப்பா ! அதனால்தான் ஸ்தாவரகன் எங்காவது வண்டியை நிறுத்திவிட்டு நிழலில் தங்கியிருப்பான்.

சகா : அவன் வரும் வரையில் நான் என்ன செய்வது ? விட ! ஒரு பாட்டுப் பாடட்டுமா !

விடன் : கட்டாயம் செய்யத் தக்கது! உடனே பாடு.

சகா : (பாடுகிறான்).

**சோரன் நானடா ! ச-காரன் நானடா !**
**வீரன் நானடா ! உன்—பேரன் நானடா !**

சகா : எப்படி பாட்டு ?

விடன் : சொல்லணுமா ? நீ கந்தர்வன் அல்லவா ?

சகா : சந்தேகமென்ன ? குயில் மாமிசத்தை நெய்யிலே வதக்கி, அதற்குப் பெருங்காயமும் மிளகுப் பொடியும் சேர்த்துச் சாப்பிடுகிறவன் அல்லவா நான் ? என் குரல் ஏன் கந்தர்வனுடையதுபோல இராது ? (உற்றுக்கேட்டு) விடா ! விடா ! வந்துவிட்டது வண்டி !

விடன் : எங்கே !

சகா : எங்கோ வருகிறது; அதோ—காதிலே விழல்லே— கிழட்டுப் பன்றியைப்போல 'குர்குர்' என்று உறுமுவது ?

விடன் : பேஷான மூளை! ஆம்; அதோ வண்டி!

[ஸ்தாவரகன் அவசரமாக வண்டியை ஓட்டி வருகிறான்; வண்டிக்குள் வசந்தசேனை நடுங்கிக் கொண்டிருக்கிறாள்; வண்டியை வெளியில் நிறுத்திவிட்டு ஸ்தாவரகன் உள்ளே வருகிறான்]

சகா : ஸ்தாவரகா! வந்தாயா?

ஸ்தா : வந்தேன் ஐயா!

சகா : வண்டி?

ஸ்தா : வந்துவிட்டது!

சகா : மாடு?

ஸ்தா : அதுவுந்தான்!

சகா : நீ?

ஸ்தா : நான்கூட வந்துவிட்டேன் ஐயா!

சகா : அப்படியானால் வண்டியை உள்ளே கொண்டு வா

ஸ்தா : எந்த வழியாலே?

சகா : மதில்சுவர் வழியாக!

ஸ்தா : எசமான்! மாடு செத்து, வண்டி முறிஞ்சு, நானும் போயிடுவேனே!

சகா : கவலையில்லை; வேறே மாடு, புதிய வண்டி, உசிரோடு இருக்கிற ஆள் எல்லாம் கிடைக்கும். நான் ராஜா மச்சுனன்; போ, ஓட்டி வா!

ஸ்தா : நானே செத்துட்டால்?

சகா : ரொம்ப நல்லதாப் போச்சு ; அதே வழியில் ஓட்டி வா !

[ஸ்தாவரகன் வெளியே சென்று திரும்பி வந்து]

ஸ்தா : எசமான் ! வண்டி வந்திடுச்சு.

சகா : காளேயும் சாகலே ; கயிறும் அறுகலே ; நீயும் சாகலேயே !

ஸ்தா : இல்லே.

சகா : விட ! வா வண்டியைப் பார்ப்போம். நீ எனது பரமகுரு அல்லவா ! என் அன்பிற்குரிய நீதான் முதலில் பார்க்கவேண்டும். அதனால் நீயே முதலில் வண்டியில்ஏறு.

விடன் : உத்திரவு (செல்கிறான்).

சகா : ஏய் விட ! நில். என்ன, உங்க அப்பன் வீட்டு வண்டியோ நீ முதல்லே ஏர்ரதுக்கு? வண்டி என்னுடையது. நானே முதல்லே ஏறுவேன்.

விடன் : நீங்கள்தானே என்னே ஏறச் சொன்னீர்கள் ?

சகா : நான் அப்படிச் சொன்னால் உடனே ஏறப் போயிடலாமோ ? 'யஜமானே ! தாங்கள் தான் முதலில் ஏற வேண்டும்' என்று சொல்வது உன் கடமையில்லேயா ?

விடன் : (வணங்கி) தாங்களே முதலில் ஏறுங்கள்.

சகா : இதோ ! அப்பா மகனே ! ஸ்தாவரக ! வண்டியைத் திருப்பி வைத்துக் கொள்ளுடா !

ஸ்தா : அப்படியே. ஏறுங்கள்.

[சகாரன் வண்டியில் ஏறச்சென்று திரும்பிப் பதறி ஓடி வந்து விடன் கழுத்தைக் கட்டிக்கொண்டு]

**சகா :** விட! விட!! செத்தே! செத்தே!! வண்டிக்குள்ளே ஒரு ராக்ஷஸியோ திருடனோ உட்கார்ந்திண்டிருக்கா. ராக்ஷஸியானால் நம்மைத் திருடிவிட்டாள். திருடனானால் நம்மைக் கட்டாயம் சாப்டுடுவான்.

**விடன் :** சகார! பயப்படாதே! மத்தியான வெய்யிலிலே —கண் மங்கலால்—ஸ்தாவரகனுடைய நிழல் அப்படித் தெரிந்திருக்கும்.

**சகா :** டேய்! ஸ்தாவரக! இருக்கிறாயா—உசிரோடே?

**ஸ்தா :** இருக்கிறேனுங்க!

**சகா :** நல்லது. உனக்கு ரொம்ப பயம்! நீ வண்டிக்குள் பார்க்காதே! விட! நீ போய்ப் பார்த்து வா!

**விடன் :** (வண்டிக்குள் வசந்தசேனையைப் பார்த்து வியப்பும் விசனமும் அடைந்து)
ஆஹா! ஆச்சரியம்! புலியைத் தேடி மான் வந்துவிட்டது. சரத்கால சந்திரனைப் போலுள்ள மணற்குன்றின் மேல் விளையாடும் பெண் அன்னம் ஆண் அன்னத்தை விட்டு ஒரு காக்கையைத் தேடி வந்திருக்கிறது.

**சகா:** ஆ—என்ன? காக்கை ஓடுதா? நரிகள் பறக்குதா? டேய்! விட! அதெல்லாம் உன்னைப் பல்லாலே பார்த்து, கண்ணாலே பிடுங்கறதுக்குள்ள—நான் ஓடிப் போயிடுறேன்!

**விடன் :** (வசந்தசேனையைப் பார்த்து) நாரீமணீ! உனக்கு இது அடுக்குமா? வசந்தசேனே! என்ன இருந்தாலும் வேசி என்பது........

**சகா :** ஆ....என்ன என்ன—வசந்தசேனையா?

[யோசிக்கிறான்]

**வசந்தசேனை :** (ரகசியமாக) அப்படியில்லை! ஐயா! அடையாளம் தெரியாமல் வேறு வண்டியில் ஏறிவிட்டேன். என்னைக் காப்பாற்றவேண்டும்.

**விடன் :** ஏ! பயப்படாதே! இவனை நான் ஏமாற்றி விடுகிறேன்! (சகாரனிடம் போய்) சகாரா! வண்டியிலே இருக்கிறவள் பெரிய ராக்ஷஸி!

**சகா :** இருக்காது. ராக்ஷஸியாயிருந்தால் உன்னைத் திருடி இருப்பாள்; திருடனாக இருந்தால் உன்னைத் தின்றிருப்பான். இரண்டுமில்லை....ஆகையால்....

**விடன் :** இல்லை சகார! உண்மை! யாராயிருந்தால் நமக்கென்ன? வா! தோட்டத்தின் குறுக்கு வழியாலே நடந்தே போய் விடுவோம்!

**சகா :** நடந்து போவதால்?

**விடன் :** உடம்புக்கு நல்லது; மாடுகளுக்கும் சௌகரியம்.

**சகா :** அப்படியானால்—சரி.

**விடன் :** ஸ்தாவரக! கொண்டு போ வண்டியை! நாங்கள் நடந்தே போகிறோம்.

**சகா :** யார் சொன்னது? முடியாது! ஊருக்குள்ளே—ராஜா மச்சுனன் நடந்து போனால்—ஜனங்கள் உற்று உற்றுப் பார்ப்பார்கள்!

**விடன் :** (தனக்குள்) விஷத்தை அமிர்தமாக்க இயலுமா? உம்; இருக்கட்டும். (சகாரனைப் பார்த்து) வண்டியில் வசந்தசேனை வந்திருக்கிறாளப்பா!

சகா : (குதித்து) வசந்தசேனையா ? அட! எனக்கு வந்து விட்டது அபூர்வமான அதிர்ஷ்டம்! அன்றைக்கு கோபித்துக் கொண்டேன்—இன்றைக்கு அவள் காலில் விழுகிறேன்!

(வசந்தசேனையிடம் போய்) தாயே! அம்பிகையே! சரணம்! மன்மதன் என்னை வாட்டுகிறானே! மனமிரங்கடி மகேஸ்வரீ (காலைப் பிடித்துக் கொள்ளுகிறான்; வசந்த சேனை உதைக்கவே கீழே விழுந்து எழுந்து)
அடீ! என்னையா உதைத்தாய்?

வசந் : சகாரப் பதரே! உன்னையல்ல; உன் தலையை உதைத்தேன்; எட்டி நில்; கிட்ட வராதே!

சகா : அடேய் ஸ்தாவரக! இவளை எங்கேடா தேடிப் பிடிச்சே?

ஸ்தா : நாட்டுப்புறத்து வண்டி, நடுப் பாதையிலே நின்னுடுச்சி எசமான்; நான் இந்த வண்டியைச் சாருதத்த ஐயா வீட்டண்டை நிறுத்திட்டு—இன்னொரு வண்டிக்கு உருளை தூக்கப் போனேன் எசமான்!

சகா : அப்பொழுது சாருதத்தன் வண்டி என்று நினைத்து இதில் ஏறி விட்டாளா? ஏண்டி தாசி! தவறிப் போய் இங்கே வந்துட்டயா? இறங்கடி வண்டியை விட்டு! நீ சுமக்கறது சாருதத்தன் காதலை! உன்னைச் சுமக்கறது சகாரன் மாடுகளா? சீ சீ! வெட்கமில்லை? தேவதைகளும் கும்பிடுற என் தலைமேலே உதைச்சிட்டு என் வண்டியில் இன்னுமா உட்கார்ந்திருக்கறே? இப்பொ— உன்னை என்ன செய்யப் போறேன்—தெரியுமா? வாலியின் பெண்சாதியை ஜடாயு இழுத்ததைப் போல—உன் தலை மயிரைப் பிடித்து இழுத்துத் தள்ளப் போறேன்.

விடன் : சகார! பெண்களின் கூந்தலைப் பற்றி இழுத்தல் மகா பாபம்; வேண்டாம் இரு; நான் இறக்கி விடுகிறேன் (வண்டியிடம் போய்) வசந்தசேனே! இறங்கி விடு.

[வசந்தசேனை வண்டியை விட்டிறங்கி ஓரிடத்தில் நிற்கிறாள்.]

சகா : (தனக்குள்) காலால் என்னை உதைத்தாள்—இனி இவளை உயிரோடு விடப் போவதில்லை. (விடனிடம் வந்து) விட! உனக்கு நல்ல சால்வை, பெரிய வீடு, நிறைய பணம் எல்லாம் வேண்டுமா ?

விடன் : வேண்டும்.

சகா : அப்படியானால் நான் சொல்கிறபடி செய்!

விடன் : எதுவும் செய்கிறேன்—அக்ரமத்தைத் தவிர!

சகா : அக்ரம வாசனைகூட அதில் இல்லை.

விடன் : அப்படியானால் சொல், செய்கிறேன்!

சகா : வசந்தசேனையைக் கொன்று விடு.

விடன் : பேஷ்! குணங்கள் நிறைந்த நிரபராதியான ஒரு யௌவன மங்கையைக் கொல்ல வேண்டுமா? அப்புறம் அந்தப் பரலோக நதியை எந்தத் தோணியைக் கொண்டு கடப்பதோ?

சகா : ஏ! பயந்தாங்கொள்ளி! நான் தருகிறேன் எத்தனை படகு வேண்டுமானாலும்! அவளை உடனே கொல்! மனித சஞ்சாரமில்லாத இந்தத் தோட்டத்தில் உன்னை யார் பார்க்கப் போகிறார்கள்?

விடன் : யாரா? இந்தப் பத்துத் திசைகள்; வனதேவதைகள்; சந்திர சூரியர்; தருமம்; காற்று; வானம்; மனச்சாட்சி; பூமி. இவையெல்லாம் பார்க்கும் அல்லவா?

சகா: அப்படியானால் இவளைத் துணியால் மூடிக் கொன்று விடு.

விடன்: மூடா! பாவத்துக்கு அஞ்சாத பாதகா! அழிந்து போவாய்!

சகா: (தனக்குள்) இந்த மடையன் பாவத்துக்குப் பயப் படுகிறான். ஸ்தாவரகனைக் கேட்கிறேன்.

[ஸ்தாவரகனிடம் போய்]

குழந்தே! ஸ்தாவரகா! உனக்குத் தங்கக் கடகம் தருகிறேன்.

ஸ்தா: குடுங்க; சந்தோஷமாப் போட்டுக்கறேன்.

சகா: தங்கப் பலகை கொடுக்கிறேன்!

ஸ்தா: நல்லா மேலே உட்கார்ரேன்!

சகா: என் எச்சில் பச்சணம் எல்லாம் கொடுக்கிறேன்.

ஸ்தா: திங்கறேன் எசமான்!

சகா: ஒரு வார்த்தை சொல்றேன்—கேட்கிறயா?

ஸ்தா: சொல்லுங்க எசமான்—கெட்டதா இல்லா திருந்தா!

சகா: கெடுதலே இல்லே.

ஸ்தா: அப்போ—சொல்லுங்க!

சகா: இந்த வசந்தசேனையைக் கொல்லு!

ஸ்தா: ஐயையோ! வாணுங்க; இந்தப் பாவிதான் எசமானே அந்த அம்மாளே வண்டியிலே எப்படியோ தவறுதலா ஏத்திகிட்டு வந்துட்டேன்!

சகா : டேய்! மறுத்துப் பேசாதே! நான் உனக்கு எசமான்; நான் சொன்னதைச் செய்!

ஸ்தா : என் உடம்புக்குத் தானுங்க நீங்க எசமான்; என் நடத்தைக்கு இல்லிங்க! மன்னிக்கணும்; பயமாயிருக்குங்க!

சகா : (சிரித்து) பயமா—யாரிடத்தில்?

ஸ்தா ; (மேலே காட்டி) பரலோகத்துகிட்டே!

சகா : எதுடா அது - பரலோகம்?

ஸ்தா : அதுதானுங்க—பாவத்துக்கும் புண்ணியத்துக்கும் முடிவைக் கொடுக்கிற இடம்!

சகா : புண்ணியத்துக்கு என்னடா பலன்?

ஸ்தா : உங்களைப் போலப் பணத்திலே மிதக்கறதுங்க!

சகா : பாவத்துக்கு!

ஸ்தா : நானிருக்கிறேனே—இன்னொருத்தன் போடற சோத்துக்காகக் காத்துகிட்டு-இதுதானுங்க! அதனாலே கெட்ட காரியம் செய்ய மாட்டேனுங்க!

சகா : ஆ—மாட்டேனென்று சொல்கிறாய்?

[அடிக்கிறான்]

ஸ்தா : அடியுங்க! அடியுங்க! கொல்லுங்க! என்ன செஞ்சாலும் தப்புக் காரியத்துக்கு நான் சம்மதிக்க மாட்டன். போன சன்மத்திலே செஞ்சதுக்கெல்லாம் இப்பொ அநுபவிக்கிறது போதாமெ—இந்த சன்மத்திலேயும் வேறே விலை குடுத்து வாங்குவனா? முடியாதுங்க.

சகா : (தனக்குள்) அவன் பாவத்துக்குப் பயப்படுகிறுன் இவன் பரலோகத்துக்குப் பயப்படுகிறுன்; இந்தச் சகாரன் எதுக்காகப் பயப்பட வேண்டும்? அரசன் மச்சுசுனன், சிறந்த புருசன், மனிசன், யாரைக் கண்டு பயப்படப் போகிறுன்? (ஸ்தாவரகனைப் பார்த்து) அடேய்! நீ போ! தொலைவில் போய்த் தூங்கு; அல்லது தனியாக நில்.

ஸ்தா : உத்தரவு!

[போகிறுன்]

சகா : (கச்சம் கட்டிக்கொண்டு வசந்தசேனையிடம் போய்) அடி நேராக நிமிர்ந்து நில்லு! உன்னைக் கொல்லுகிறேன்.

வசந் : ஆ! என்னைக் காப்பாரில்லையா?

விட : அடேய்! சகாரா! என் கண் முன்னுல் நீ அவளைக் கொல்ல முடியாது (சகாரனின் கழுத்தைப் பிடித்து) அவளை நீ கொல்வதானுல் உன்னை நான்.

சகா : அடேய் விட! என் சோற்றைத் தின்றுவிட்டு என்னையேவா கொல்லப் பார்க்கிறுய்? ஆ! அடிமை அரசனைக் கொல்கிறுன்! சேவகன் ராஜாவைக் கொல்கிறுன்.

[மூர்ச்சையாவது போல் கீழே விழுந்து, யோசித்து, மெல்ல எழுந்து]

விட! விட! ஏமாந்து போய்விட்டாயே! அஹஹ!

[சிரிக்கிறுன்]

விடன் : என்னடா அது?

சகா: இது கூடவா உனக்குத் தெரியவில்லை. போடா பைத்தியமே, போ! என் குலம் என்ன? நான் என்ன? நான் போய் கொலை—அதிலும் பெண் கொலை—புரிவேனு? இது தெரியவில்லையே உனக்கு? வேடிக்கைக்காக நீ என்ன சொல்கிருயோ பார்ப்போம் என்று இப்படி யெல்லாம் செய்தேன்! பூ! சுத்த வெள்ளையப்பம் நீ!

விடன்: சகாரா! அப்படியானுல் நீ நல்லவன்தான்! சரி; வசந்தசேனையை அவள் வீட்டுக்கு அனுப்பிவிடு!

சகா: போகட்டுமே—நானு வேண்டாம் என்கிறேன்? தானுக என்னிடம் வந்திருக்கிருளே—தவறி வந்தாளா, அல்லது காதல் கொண்டு வந்து அதைச் சொல்ல வெட்கப்படுகிருளா என்பதை நன்ருகத் தெரிந்துகொள்வதற்காகத்தான் இத்தனை வேஷம் போட்டேன்! நீ என்னடா என்ருல் என்னையே கொல்ல வந்துவிட்டாய்!

விடன்: ஏது நீயும்........

சகா: இவ்வளவு கெட்டிக்காரன் ஆகிவிட்டாயே என்கிருயா? நான் எப்பொழுதுமே கெட்டிக்காரன்தான் அப்பா! நீதான் என்னைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. போ, போ. வசந்தசேனையை அனுப்பி விடு. நாழிகை ஆகிறது; போகட்டும்.

விடன்: சரி. வசந்தசேனு.......!

சகா: இரு இரு; ஓர் உத்தமியான உயர்குலப் பெண்ணை கால்நடையாக அனுப்புவது நம்முடைய அந்தஸ்துக்கே அவமானம்! வந்த வண்டியிலேயே அவளை அனுப்பி விடு. போ! வண்டி யோட்டி ஸ்தாவரகன் அங்கே எங்கேயோ தூங்கிக் கொண்டிருப்பான்; அழைத்து வா! வசந்தசேனையை வண்டியில் ஏற்றிச் செல்லட்டும்.

விடன் : சரி. இதோ போய் அழைத்து வருகிறேன்!

வசந் : விட! விட! சரணம்! சரணம்! போகாதீர்!

விடன் : என்னடா சகாரா! நான் வருவதற்குள் ?........

சகா : என்ன விட! இன்னுமா நீ என்னைத் தெரிந்து கொள்ளவில்லை?

விடன் : டேய்! இந்த வசந்தசேனை இப்பொழுது என்னைச் சேர்ந்தவள். அவளை உன்னிடம் அடைக்கலம் வைத்துச் செல்கிறேன்!

சகா : மிகவும் சந்தோஷம்! நான் காப்பாற்றித் தருகிறேன்!

விடன் : சத்தியமாக ?

சகா : சத்தியமாக! சத்தியமாக!! கோடி தரம் சத்தியமாக!!!

விடன் : வசந்தசேனே ! உன்னை அடைக்கலம் வைத்து, சத்தியமும் வாங்கி விட்டேன். நீ பயப்படாதே ; இதோ வந்து விடுவேன்—ஒரு நொடியில் !
(போகிறான் ; கொஞ்ச தூரம் போய், தனக்குள்) இவனை நம்பக்கூடாதுதான்! என்னைப் போக விட்டு வசந்தசேனைக்கு தீங்கு செய்தாலும் செய்வான்; ஆகையால் மறைந்து நின்று கவனிக்கிறேன்.

[ஓரிடத்தில் மறைந்து நிற்கிறான்]

சகா : (தனக்குள்) இந்தக் கிழ நரி-விடன், எங்கேயாவது ஒளிந்திருந்து பார்த்தாலும் பார்ப்பான். ஆகையால் ஓர் உபாயம் செய்கிறேன்.

(வசந்தசேனையைப் பார்த்து) வசந்தசேனே! பயப்படாதே! வண்டி சீக்கிரம் தயாராகி விடும். ஏறிக்கொண்டு போகலாம். அந்த விடன் அப்படித்தான்! போனால் சீக்கிரம் திரும்பமாட்டான்!

**விடன் :** (தனக்குள்) நான் நினைத்தது தவறு; களங்கம் இல்லாமல் இருக்கிறான்; சீக்கிரமாக ஸ்தாவரகனை அழைத்து வராவிட்டால் கோபங் கொள்வான்; இதோ —போகிறேன்! [போகிறான்]

**சகா :** (வசந்தசேனையிடம் போய்) வசந்தசேனே! இசைந்து பார்! அசைந்து நட! ஒசிந்து விழு!

**வசந் :** சீ மூடா! உளறாதே! என்னைச் சீக்கிரம் அனுப்பி விடு.

**சகா :** அனுப்புவதா? உன்னையா? (நகைத்து) ஒருக்காலுமில்லை. அந்த விடனை வெளியே அனுப்புவதற்கு நான் செய்த தந்திரம் அது; உண்மையில் நான் உன்னைவிடப் போவதில்லை. ஏன் பேசாமல் நிற்கிறாய்? வா! என்னைத் தழுவிக் கொள். பொன் தருகிறேன்; புது நகை போடுகிறேன். அன்பாகப் பேசுகிறேன். தலை வணங்குகிறேன்.

**வசந் :** மூடு வாயை! உன் பணத்துக்காகவும் பதவிக்காகவும் ஆசைப்பட்டு, ஒழுக்கத்தை அழித்துக்கொள்ளமாட்டேன்; வறிஞனே ஆனாலும் குலமும் சீலமும் உடைய அந்த மகா புருஷனையே நான் விரும்புகிறேன். மாமரத்தைத் தழுவிய பூங்கொடி முருங்க மரத்தை தழுவாது. போ அப்பால்!

சகா : என்னடி சொன்னாய்? சாருதத்தன் மாமரம்; நான் முருக்க மரம்! கல்யாண முருக்கன்கூட இல்லை—வரட்டு முருக்க மரம்! நீ பேசுவது இங்கே என்னுடன்! நினைப்பது அங்கே சாருதத்தனை!

வசந் : ஆம்; என் மனத்தில் வாழும் அவர் பெயரை ஆயிரம் தடவை வேண்டுமாயினும் சொல். எப்பொழுதும் இடைவிடாமல் சொல்லிக்கொண்டே இரு. அதுவே எனக்கு இன்பமளிக்கிறது!

சகா : அளிக்குமடி அளிக்கும்! இப்பொழுது உன்னை ஒழிக்கப் போகிறேனே—சாருதத்தன் வந்து காப்பாற்றப் போகிறானா?

வசந் : சந்தேகமென்ன? கண்ணால் பார்த்துவிட்டால் - கட்டாயம் காப்பாற்றுவார்!

சகா : சாருதத்தன்! சாருதத்தன்! யாரடி அவன் சாருதத்தன்! சாருதத்தன் மட்டும் அல்ல, வாலி பிள்ளை இந்திரன், ரம்பை மகனான காலநேமி, ருத்திரதேவன், துரோணனின் மகன் ஜடாயு, சாணக்யன், திரிசங்கு இவர்களெல்லாம் வந்தால்கூட உன்னைக் காப்பாற்ற முடியாதடி! இதோ பார்! [அடிக்கிறான், உதைக்கிறான்] இப்பொழுது நான் என்ன செய்யத் போகிறேன்—தெரியுமா? சாணக்கியன் சீதையைக் கொன்றதைப்போல்—ஜடாயு திரௌபதியை வதைத்ததைப்போல்—உன் கூந்தலைப்பற்றி இழுத்துக் கொல்லப் போகிறேன்.

[கொல்ல யத்தனிக்கிறான்]

வசந் : ஆ! சாருதத்தா! சாருதத்தா!

சகா : இன்னுமா அவன் பெயரைச் சொல்லுகிருய்? ஒழிந்து போ!

[கழுத்தை நெரித்துக் கீழே சாய்க்கிருன்; வசந்தசேனை மூர்ச்சை யுற்று விழுகிருள்]

சகா : ஒழிந்தாள்! இறந்தாள்! நான் ஆசைப்பட்டும்— அவளுக்கு என்பேரில் ஆசையில்லை. ஒரே அடியில் உயிரை வாங்கி விட்டேன்! ஆஹா! என் அம்மா இங்கே என் பக்கத்திலிருந்து என் சூரத்தனத்தைப் பார்த்திருந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்!

(யோசித்து) நாழிகை ஆகிவிட்டது. அந்தக் கிழட்டு விடன் வந்து விடுவான்! ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!

[ஒரு புறமாக நிற்கிருன்; விடனும் ஸ்தாவரகனும் வருகின்றனர்.]

சகா : வருக! வருக! விடனே! வருக! ஸ்தாவரக! சந்தோஷமாய் வருக!

விடன் : இதோ ஸ்தாவரகன்; எங்கே என் அடைக்கலப் பொருள்!

சகா : என்ன அடைக்கலம்?

விடன் : வசந்தசேனை!

சகா : அவளா? போய் விட்டாளே!

விடன் : எங்கே?

சகா : உன் பின்னலேயே!

விடன் : அந்தத் திக்கில் அவள் வரவில்லையே!

[யோசிக்கிருன்]

சகா : நீ எந்தத் திக்கில் போனாள் ?

விடன் : கிழக்குப் பார்த்து.

சகா : அவள் போனது தெற்கே பார்த்து !

விடன் : நான் தெற்கிலும் போனேன் ?

சகா : ஆனால் அவள் போனது மேற்கு நோக்கி, அல்லது வடக்கே !

விடன் : என்னடா உளறுகிறாய்? எங்கே என் வசந்த சேனை ?

சகா : அடேய் விட! என் காலை உன் தலைக்குமேல் வைத்து சத்தியம் செய்கிறேன். உண்மையில் நான் அவளைக் கொன்று விட்டேன்.

விடன் : அட பாவி ! கொன்று விட்டாயா ?

சகா : கொன்றே விட்டேன் ! மனத்தை திடப்படுத்திக் கொள்.

விடன் : உண்மையாகவா ?

சகா : ஏன் ? என் பேச்சில் நம்பிக்கை இல்லையா ? அதோ —அங்கே நேரில் போய்ப் பார் என் பராக்கிரமத்தை ?

[விடன் போய்ப் பார்த்து, தலையில் அடித்துக்கொண்டு]

ஐயோ ! ஐயோ ! நாசமாய்ப் போனேன் !

[மூர்ச்சிக்கிறான்]

சகா ஹீ ஹீ! விடனும் செத்துப் போனான் !

விடன் : (தெளிந்து) ஹூம் ! உஜ்ஜயினியின் ஜோதியே மறைந்துவிட்டது ; மன்மதன் சோலையே அழிந்து

விட்டது; (யோசித்து) இனி இந்தப் பாவி இந்தப் பெரும் பழியை என் பேரில் சுமத்தினாலும் சுமத்துவான்! ஆகையால் உடனே போய்விட வேண்டும்!

[எழுந்து ஓடுகிறான்.]

சகா: (ஓடிப் போய்ப் பிடித்து) அடேய்! ஓடாதே! நில்; நில்!

விடன்: சீ கொலைகாரா! என்னைத் தொடாதே!

சகா: அடேய்! வசந்தசேனையைக் கொன்று விட்டாயே —அதற்கு என்ன பதில் சொல்லப் போகிறாய்?

விடன்: ஜாக்கிரதை! அழிந்து போவாய்!

சகா: கோடிக்கணக்கான பொன் தருகிறேன்; வாகனம் தருகிறேன். இன்னும் பலவகையான........

விடன்: எல்லாம் நீயே வைத்துக் கொள்!

சகா: ஹீ ஹீ! (சிரிக்கிறான்.)

விடன்: சிரியடா சிரி! மங்காத புகழுடைய மாணிக்கத்தை மனந் துணிந்து மறைத்து விட்ட மகா பாவீ! நன்றாகச் சிரி.

சகா: கோபம் வேண்டாம் விடா! வா! தாமரைக் குளத்தில் இறங்கி விளையாடலாம்!

விடன்: நீ போய் விளையாடு—புண்ணிய மலரைப் பிடுங்கி எறிந்த உன் புனிதத் தன்மையை நினைத்துக் கொண்டு விளையாடு!

சகா: நீ?

விடன்: போகிறேன்!

சகா: என்னைத் தனியாக விட்டா?

**விடன்** : இல்லை ; நீ தனியாக இல்லை! உன் மூர்க்கத்தனம்; உன் அகம்பாவம்; நீ புரிந்த கொலைபாதகம்; இவையெல்லாம் உன் கூடவே இருக்கின்றன. அவற்றுடன் விளையாடு! உறவாடு! நான் போகிறேன்! இந்தக் கூடா நட்பால் எனக்குக் கொடுமையே விளையும்!

**சகா** : அடேய்! விட! என் ராஜ்யத்திலே என்னை விட்டு நீ எங்குப் போக முடியும்?

**விடன்** : போக முடியுமடா! யாரிடம் தெரியுமடா? நல்லோரான ஆரியகன், சர்விலகன், சந்தனகன் இவர்களிடம்! சீ! உன்னுடன் பேசுவதும் பாவம்! [போகிறான்]

**சகா** : (பிடித்து நிறுத்தி) அடே விட! வசந்தசேனையைக் கொன்றுவிட்டு எங்கே ஓடப் பார்க்கிறாய்? வா நியாய ஸ்தலத்திற்கு!

**விடன்** : அடேய் போக்கிரி! நியாயமா வேண்டும்? (தன் கத்தியை உருவிக்கொண்டு) இந்தக் கத்தி முனையில் இருக்கிறது ஞாயம்; தீர்த்துக் கொள்; நில்!

**சகா** : (பயந்து) விட! விட! அதற்குள் பயந்துவிட்டாயே! நீ பயந்தாங்கொள்ளி; போ! ஓடிப் போ!

[விடன் விரைந்து போகிறான்]

**சகா** : (ஸ்தாவரகனிடம் போய், தன் ஆபரணங்களை நீட்டி) ஸ்தாவரகா! இந்தா! உனக்கு வெகுமதி!

**ஸ்தா** : வேண்டாம் எசமான்! இதெல்லாம் உங்களுக்குத் தான் தகும்!

**சகா** : சரி; நீ போ! மாடுகளை ஓட்டிக்கொண்டு போய் மாடியின்மேல் நின்றிரு; நான் வந்து விடுகிறேன்!

**ஸ்தா :** நல்லது எசமான்! [போகிறான்]

**சகா :** (தனக்குள்) முடிந்தது ஒரு வழியாக! தனக்கு ஆபத்து வருமோ என்று பயந்து விடன் போய்விட்டான்! ஸ்தாவரகன் போய் மேல் மாடியில் நிற்பான். அவனை அங்கேயே விலங்கு பூட்டி அடைத்து விடுகிறேன். அப்புறம் ரகசியம் எப்படி வெளியாக முடியும்? (வசந்தசேனையைப் பார்த்து) நன்றாக இறந்து விட்டாளா?

(புரட்டிப் பார்த்து). ஆம்; செத்தாள் தேவடியாள்! (தன் பட்டாடையால் அவளை மூடி, அதிலே தன் பெயர் இருப்பதைப் பார்த்து) : அட! இந்த ஆடையில் என் பெயர் இருக்கிறதே! இது உதவாது!
(கீழே உள்ள சருகுகளைப் பார்த்து) பேஷ்! இந்தச் சருகுகளாலே மூடுவதுதான் சரி!

[சருகுகளை மேலே போட்டு வசந்தசேனையை மூடிய பின்]

இனி, உடனே போய் மேல் மாடியில் காத்திருக்கும் ஸ்தாவரகன் காலிலே விலங்கைப் பூட்ட வேண்டும்; பிறகு, நியாய ஸ்தலம் போய், சாருதத்தன் ஆபரணங்களுக்காக ஆசைப்பட்டு வசந்தசேனையைக் கொன்று விட்டான் என்று வழக்குத் தொடர வேண்டும். அதனால் சாருதத்தனும் அழிந்து போவான்! இதோ போகிறேன்!

[குதித்து மகிழ்ச்சியுடன் செல்கிறான்; எதிரில் பௌத்த பிக்ஷு ஸம்வாஹகன் வருவதைப் பார்த்து]

சீ சீ சீ! எந்தப் பக்கம் போனாலும் இவன் எதிரே வருகிறான்; (யோசித்து) ஓ! இந்த சந்நியாசி இப்பொழுது தான் என்னிடம் உதை வாங்கினான். அதை மனசில் வைத்துக்கொண்டு - நான் கொலை புரிந்ததாக நியாய ஸ்தலத்தில் சொன்னாலும் சொல்லி விடுவான்! ஆகையால், இவன் கண்ணில் படாமல் ஓடிப் போக வேண்டும்! அதோ! உடைந்த மதிற் சுவர்! அதன்மேல் ஏறி, ஹநுமான் சிகரத்தின்மேல் மகேந்திரம் போனதைப் போல பாய்ந்து ஓடி விடுகிறேன்.

[மதிற் சுவரேறிக் குதித்துப் போகிறான்.]

[பிக்ஷு ஸம்வாஹகன் நனைத்த ஆடையைக் கையில் எடுத்துக் கொண்டு பிரவேசிக்கிறான்.]

ஸம் : இதை நன்றாகத் தோய்த்து தோய்த்து அலசி விட்டேன்! எங்கே உலர்த்துவது?
மரக் கிளையில் மாட்டிக் காய வைக்கலாமா? ஊஹூம்; இந்தக் குரங்குகள் கிழித்து விடும்!

பூமியில் உலர்த்தினால்? சே! தூசு ஒட்டிக் கொள்ளும்! (வசந்தசேனையை மூடியுள்ள சருகுக் குவியலைப் பார்த்து):—இதோ காற்றால் குவிக்கப்பட்டிருக்கிறது சருகுக் குவியல்! இதன் மேல் உலர்த்துகிறேன்!

[உலர்த்திவிட்டு அருகில் உட்கார்ந்து]

புத்தம் சரணம் கச்சாமி! தர்மம் சரணம் கச்சாமி சங்கம் சரணம் கச்சாமி! நமோ, புத்தாய! நமோ புத்தாய!

(சருகுக் குவியல் அசைகிறது. அதைப் பார்த்து) :—காற்றுக்கூட இல்லையே! ஒருகால் என் காவி உடையின் மகிமையோ?

(ஒரு கை வெளியே தெரிகிறது) :—இதோ கை! வளையணிந்த கை; பொன்னணிந்த பெண்ணின் கை!

(இன்னொரு கையையும் பார்த்து) :—என்ன! நான் பார்த்த கை போல இருக்கிறதே!
(சருகுகளை விலக்கிப் பார்த்து) ஓ! சந்தேகமே இல்லை; எனக்கு அபயமளித்த உபாஸிகையேதான்!

(வசந்தசேனை தண்ணீர் வேண்டுமென்று ஜாடை காட்ட) : ஐயையோ! தண்ணீர் கேட்கிறார்களே! தடாகம் அருகில் இல்லையே! என்ன செய்வேன்?

(யோசித்து) ஆம்! இந்த ஈர வஸ்திரத்தைப் பிழிகிறேன். (நனைந்த ஆடையைப் பிழிந்து வசந்தசேனையின் மூர்ச்சையைத் தெளிவிக்கிறான்.)

வசந் : (கொஞ்சமாகக் கண்ணை விழித்து) : தாங்கள் யார்?

ஸம் : தாயே! என்னைத் தெரியவில்லையா? அபயமளித்து, பத்துப் பொன்னையும் கொடுத்து, நான்பட்ட சூதாட்டக் கடனைத் தீர்த்துவிட்டீர்களே! அந்த அடிமையை மறந்துவிட்டீர்களா? அப்பொழுது என் பெயர் ஸம்வாஹகன் அல்லவா?

வசந் : ஓ, தெரிகிறது! ஏன் என்னைப் பிழைப்பு மூட்டினீர்? நான் இறந்திருக்க வேண்டியவள்! இழிவான வேசி குலத்தில் பிறந்தவள்!

ஸம் : நமோ புத்தாய! நமோ புத்தாய! உபாஸிகே உத்தமிகளுக்கு உதாரணம் தாங்கள்! கற்பின் அணி

கலன் தாங்கள்! ஒழுக்கத்தின் உறைவிடம் தாங்கள்! (ஒரு கொடியை வளைத்துக் கொடுத்து):—இதோ! இந்தக் கொடியைப் பிடித்துக்கொண்டு மெதுவாக எழுந்திருங்கள்! அப்புறம் பேசுவோம்!

(வசந்தசேனை எழுந்த பின்பு):—அருகிலே உள்ள பௌத்த விஹாரத்தில் என் சகோதரி இருக்கிறாள்; அங்கே போய் இளைப்பாறிய பின் தங்களை இல்லம் சேர்ப்பிக்கிறேன்! வாருங்கள்!

[இருவரும் நடக்கிறார்கள்]

**ஸம்:** மெல்ல,...மெல்ல நடவுங்கள்!

(திரையில் பார்த்து) :-விலகுங்களையா விலகுங்கள்! வழி விடுங்கள்! அவள் யௌவன மங்கை-பதினாறு வயதுள்ள பால குமாரிதான்! அதனால் என்ன ? நான் துறவி ஐயா! முற்றும் துறந்தவன்! பௌத்த பிக்ஷு! ஐம்புலன்கள் எனக்கு அடிமை! ஆகையால் வேடிக்கை பார்க்க வேண்டாம்! விலகிப் போங்கள்!

[போகிறார்கள்; திரை விழுகிறது.]

## காட்சி—24

[சாருதத்தன் வீட்டில் ஒரு புறம்; சாருதத்தனும் மைத்திரேயனும் பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

**சாருதத்தன்:** மைத்திரேயா! ஓயாமல் இடது கண் துடிக்கிறதே!

**மைத்திரேயன்:** துடிக்கட்டுமப்பா! வாதம் மேலிட்டால் துடிப்பு உண்டாகும் என்று வைத்திய சாஸ்திரம் சொல்லுகிறது.

சாரு: என் மனம் ஏனோ கிலேசமுறுகிறது; என்னை அறியாமல் ஏதோ ஒரு துயரம் என்னைச் சூழ்ந்து நிற்கிறது மைத்திரேயா!

மைத்: அது பித்தத்தின் சேஷ்டையப்பா! படுத்து நன்ருகத் தூங்கு; குணமாய்விடும். நான்கூட இப்போது படுத்துத் தூங்கத்தான் போகிறேன்.

[ரதனிகை நகைப் பெட்டியுடன் வருகிருள்; அதைச் சாருதத்தனிடம் கொடுக்கிருள்.]

ரத: ரோஹசேனன் மண் வண்டியே போதும் என்று வாங்கிக்கொண்டான்; ஆதலால், தூதையம்மாள் இந்த ஆபரணங்களை வசந்தசேனையிடம் சேர்ப்பிக்கச் சொன்ஞர்கள்.

சாரு: (நகைப் பெட்டியை வாங்கிக்கொண்டு) மைத்திரேயா! நமது வீட்டின் நிலைமை தூதைக்குத் தெரியும்? மறுபடியும் கள்வன் வந்தால் என்ன செய்வதென்று அவளுக்குப் பயம். இந்தா! நீ இதைக் கொண்டு போய் வசந்தசேனையிடம் கொடுத்துவிட்டு, உத்தியான வனத்திற்கு ஏன் வரவில்லை என்று கேட்டு வா!

மைத்: (வாங்கிக்கொண்டு) அவள் இருந்தால் கொடுத்தும் கேட்டும் வருகிறேன், இல்லாவிட்டால்?

சாரு: இல்லாமல் எங்குப் போவாள்? போய் வா. அபசகுனம்போல் ஒன்றும் பேசாதே!

மைத்: சுப சகுனமாகவே பேசுகிறேன். ஆனல்—ரொம்பத் தூக்கம் வருகிறது. கொஞ்சம் தூங்கின பிறகுதான் என்னல் போக முடியும்!

**சாரு:** சரிதான்; அன்றைக்குத்தூங்கி ராத்திரிக்கொள்ளைக்காரனிடம் ஆபரணத்தைக் கொடுத்தாய்! இன்றைய தூக்கத்தில் பகல்கொள்ளைக்காரனிடம் கொடுத்து விட்டால்?

**மைத்:** சாருதத்தா என்னைத் 'தூங்கு மூஞ்சி' என்று நினைத்து விடாதே; நான் தூங்காமல் தூங்கும் சுக புருஷன்! உனக்குச் சந்தேகமெதற்கு? தூங்கி விழித்த பின் நான் வசந்தசேனையின் வீட்டுக்குப் போகும்போது உன்னைப் பார்த்து—இந்த நகைகளையும் காட்டிவிட்டுப் போகிறேன். சரிதானே?

**சாரு:** நீ தூங்காமலேயே போய் வருவதானால்—அது தான் எனக்குச் சம்மதம்!

**மைத்:** நான் அன்றைக்கே சொல்லியிருக்கிறேனே—மறந்துவிட்டாயா? வைத்திய நூல் சொல்வதைக் கேள்:

"தூக்கம் துறந்தால் ஏக்கம் பெருகும்;
தூக்கம் ஒன்றே துணையும் இறையும்;
தூக்கம் நன்றே தூக்கம் நன்றே;
போரில் புகினும் தூக்கம் நன்றே;
தூங்கா ஒருவன் சுகநலம் பேசுதல்
தொண்டையுள் உறுத்தும் துரும்பா குமே!"

**சாரு:** சரி சரி; போதும்; நீ போகும்போது என்னைப் பார்த்துச் சொல்லி விட்டுப் போ.

**மைத்:** உத்தரவு ஐயா! உத்தரவு! [போகிறார்கள்]

## காட்சி—25

[நீதி சபை, வேலைக்காரனான சோதனகன் அங்குள்ள நாற்காலி முதலியவற்றைச் சரிப்படுத்தித் தூசு தட்டிக் கொண்டிருக்கிறான்.]

**சோதனகன் :** (தனக்குள்) எசமான் என்னமோ நல்ல மகராஜன்தான்! இருந்தாலும் சில சமயத்திலே—பளிலரிடத்திலே ஆகிவிடுகிறது. என்ன செய்யறது—இந்தப் பாளாப்போன சாச்சி சொல்றாகளே—அவுகளை வைச்சு அல்ல சட்டம் பேசுது! அதுக்காகத்தான் கம்பளி போட்டுக் குந்தி நியாயம் பேசணும் அங்கறாக பெரியவங்க! இந்த நாற்காலி கீற்காலி இதின் மேலெல்லாம் குந்தினால் இருக்கிற மூளையும் போயிடும் இங்கறா எங்க பாட்டி! அதுக்காகத்தானே நான் இந்த நாற்காலியிலேயே குந்தறதில்லே!

(திரையில் பார்த்து) யாரது வர்ரது? ஓ! ராசா மச்சுனன்—சகாரன்! பொல்லாதவன் ஆச்சே! இங்கே எதுக்கு வர்ரான்?

**சகாரன் :** (பிரவேசித்து) ஏனப்பா! நியாயாதிபதி இன்னும் வரவில்லையா?

**சோதனகன் :** இல்லிங்க! வர்ர சமயந்தானுங்க! என்னங்க விசேசம்?

**சகா :** ஒரு வழக்கு! நான் உடனே நீதிபதியைப் பார்க்க வேண்டும்.

சோத : சரி; அவர் வந்த பிறகு நான் கூப்பிடுறேன் ; அதுவரைக்கும் நீங்க—அந்தப் புல்தரை மேலே குந்தி இருங்க.

[சகாரன் உள்ளே போகிறான் ; நீதி பதி, சிரேஷ்டி, காரியஸ்தன், இம் மூவரும் பிரவேசிக்கின்றனர் ; சோதனகன் வணங்கி வழி விடு கிறான்.]

நீதிபதி : சிரேஷ்டியாரே! கணக்கப்பிள்ளையாரே! எல்லா உத்தியோகத்தையும்விட இந்த நீதிபதித் தொழில் மிக வும் கடினமானதில்லையா ?

சிரே : கடினந்தான் ; ஆனால் தங்களுக்கு அப்படியில்லை. மனிதர்களுடைய மனோபாவத்தை விரைவில் தாங்கள் கண்டுபிடித்து விடுகிறீர்கள்.

கணக் : ஏனெனில், தாங்கள் நூல் வல்லுநர் ; வஞ்சகம் அறியும் திறத்தினர் ; சொல் வன்மை பெற்றவர் ; சினம் அற்றவர் ; நண்பன் பகைவன் என்பது பாராது நடு நிலைமை வகிக்கும் துலாக் கோல் ;

நீதி : ஆயினும் நம்மையும் அறியாது சில வேளைகளில் பொய்யன் மெய்யனாகவும் மெய்யன் பொய்யனாகவும் தீர்ப் பைப் பெற்று விடுகின்றனர் ; அந்தப் பாவங்களுக்கு....

சிரேஷ் : பதில் சொல்ல வேண்டியவர் தாங்களல்ல ; சட் டம் ; அதனை நிருமித்த அரசாங்கம் ; உண்மையில் தங்க ளுடைய குணத்திலே குற்றம் உண்டென்று கூறினால்— அது சந்திரிகையிலே இருள் இருக்கிறதென்று சொல் வது போலத்தான் !

[எல்லோரும் போய்த் தத்தம் ஆச னங்களில் அமருகின்றனர்.]

**நியா :** சோதனக! வெளியிலே பார்த்து வா—யாராவது நியாயம் பெற வந்திருக்கிறார்களா—என்று!

**சோத :** வந்திருக்கிறாருங்க—அரசன் மச்சுனன்; சகாரன்!

**நியாய :** சகாரன் வந்திருக்கிறானா? சரி. நீதி சபைக்கு இன்றைக்குச் சனியன் பிடித்துவிட்டது! சோதனக! ஒன்று செய்! இன்றைக்கு வழக்கை எடுத்துக்கொள்ள இயலாதாகையால் இன்னொரு சமயம் வரச் சொல்! அவனை!

**சோத :** (போய்த் திரும்பி வந்து) எஜமான்! அவர் ரொம்ப ரொம்ப கோவிச்சிகிட்டு மீசை முறுக்காருங்க! "இப்பவே போய்—என் அக்காளிடம் சொல்றேன்; அக்கா புருஸனை ராசாவிடமும் சொல்றேன். இந்தச் சபையைத் தூக்கிக் குளத்துலே போட்டுட்டு வேறே சபையை ஏற்படுத்தச் சொல்றேன்"—இன்னெல்லாம் கத்தறாருங்க!

**நியா :** சிரேஷ்டியாரே! என்ன சொல்லுகிறீர்?

**சிரேஷ் :** அவனைப்பற்றி நமக்கென்ன? வரட்டுமே! நியாயம் உள்ளபடி தீர்ப்பு கிடைக்கிறது.

**நியா :** சரி. வரச் சொல்.

[சோதனகன் போய் சகாரனை அழைத்து வருகிறான்.]

**சகாரன் :** (தனக்குள்) முதலிலே வழக்கை எடுக்கமாட்டேன் என்றார்; மறுபடியும் எடுக்கிறேன் என்று சொல்கிறார்; சரி. இதிலிருந்து தெரிகிறது—என்னிடம் அவருக்குப் பயம் இருக்கிறதென்பது! இனி, என் பேச்சையெல்லாம் குறுக்கு விசாரணை இல்லாமல் அப்படியே நம்பச் செய்யவேண்டும். இதோ—போகிறேன்.

நியா : வாரும்; உட்காரும்! இப்படி!

சகா : தெரியும்; இந்தப் பூமி என்னுடையது! என் இஷ்டப்படி எங்கே வேண்டுமானாலும் நான் உட்காருவேன்; (சிரேஷ்டியைக் காட்டி) இவர் தலைமேல் உட்காருவேன். (நீதிபதியிடம் போய்) உமது மடிமேல் உட்காருவேன். வேண்டாம்; இங்கே தான் உட்காருவேன் (தரையில் உட்காருகிறான்.)

நியா : சரி; தாங்கள் வழக்கைச் சொல்லுங்கள்!

சகா : என்ன? வழக்கைச் சொல்லவா? நான் யார் தெரியுமா? ராஜாவினுடைய மாமனார் என் தகப்பன்; ராஜா என் தகப்பனுக்கு மாப்பிள்ளை; என் அக்காளுடைய அகமுடையான் மகாராஜா; நான் மன்னவனின் மைத்துனன்; இப்படிப்பட்ட நான்........

நியா : உமது குலம் கோத்திரம் எல்லாம் தெரிந்த விஷயங்களே! வந்த காரியமென்ன?—அதைச் சொல்லும்!

சகா : அதைத்தான்—இப்பேர்ப்பட்ட பெரிய மனிதனுக்கும் பெரிய மனிதனாகிய நான் பகிரங்கமாகச் சொல்ல முடியாதென்று —உமது காதில் சொல்லப் போகிறேன்!

நியா : சரி, சொல்லும்.

(சகாரன் நியாயாதிபதியின் காதில் சொல்லுகிறான்.)

நியா : அந்தப் பெண் யார்?

சகா : வசந்தசேனை; நகைக்காக ஆசைப்பட்டு யாரோ கொன்றுவிட்டார்கள்—நான் கொல்லவே இல்லை.

நியா : கணக்குப்பிள்ளை! எழுதிக் கொள்ளும் "நான் கொல்லவே இல்லை"

சகா : ஓய்! நான் பார்த்தேன் என்று சொல்லுகிறேன். அதற்குள் அவசரமாக எழுதச் சொல்லி விட்டீர்களே! (என்று கணக்குப்பிள்ளை எழுதியதைக் கிழித்து விடு கிறான்.)

நியா : நகைகளுக்காகக் கொல்லப்பட்டாள் என்பது உமக்கு எப்படித் தெரியும்?

சகா : ஒரே பாழ் உடம்பாய்க் கிடந்தாள் : கை கழுத்து இதிலெல்லாம் ஒன்றுமே இல்லை.

கணக்குப்பிள்ளை : பொருத்தந்தான்!

சிரேஷ்டி : இப்போது இந்த வழக்கைப்பற்றி முதலில் யாரை விசாரிப்பது ?

நியா : வசந்தசேனையின் தாயாரை விசாரிக்க வேண்டும்; சோதனக! போய் அழைத்து வா.

[சோதனகன் போய் வசந்தசேனையின் தாயை அழைத்து வருகிறான்.]

கிழவி : சுபம் உண்டாகட்டும்!

நியா : வாருங்கள்; உட்காருங்கள்!

கிழவி : அப்படியே! [உட்காருகிறாள்.]

சகா : ஏ கிழவி! வா வா!

நியா : தாங்கள் தானே வசந்தசேனையின் தாயார்!

கிழவி : ஆம் ஐயா!

நியா : வசந்தசேனை இப்போது எங்கே போயிருக் கிறாள் ?

கிழவி : ஒரு நண்பரது வீட்டுக்கு!

நியா : அவர் பெயர்?

கிழவி . சபையோர் கேட்கும் கேள்வி அல்லவே இது? சாதாரண ஜனங்களல்லவா இப்படிக் கேட்பார்கள்!

நியா அம்மா! வியவகாரம் கேட்கிறது! வெட்கப்படாமல் சொல்லுங்கள்!

கிழவி : அவரா! சார்த்தவாஹ வினய தத்தருடைய பேரன்; சாகரதத்தருடைய புதல்வன்; அவர் பெயர் சாருதத்தர்!

சகா : சரி சரி; எழுதிக் கொள்ளுங்கள்; சாருதத்தனுக்கும் எனக்கும்தான் இப்போது வழக்கு!

சிரேஷ்டி : சாருதத்தர் அவருடைய நண்பராக இருக்கலாம்.

கணக் : அதனால் குற்றமில்லையே!

நியா : இப்போது சாருதத்தரை அழைத்து விசாரிக்க வேண்டியிருக்கிறது.

கணக் : சாருதத்தரையா?

நியா : நீர் எழுதிக் கொள்ளும்; வசந்தசேனை சாருதத்தர் வீட்டுக்குப் போனாள் என்பதை! சோதனக! நீ போய் சாருதத்தரை மரியாதையுடன் அவசரப்படுத்தாமல் அழைத்துவா!

(சோதனகன் போகிறான்; சாருதத்தருடன் வருகிறான்).

சாருதத்தன் : மங்களம் உண்டாகட்டும்! நீதிபதியவர்களே! சௌக்கியந்தானே?

நியா : (அவசரத்தோடு) நல்வரவு! நல்வரவு! சோதனக, ஐயாவுக்கு ஆசனம் எடுத்துப் போடு!

[உட்காரச் செய்கிறார்]

சகா: ஆ! நன்றாயிருக்கிறது! இதுவா நியாயம்? தருமம்? பெண் கொலை புரிந்தவனுக்கா ஆசனம்? (கனைத்து) இருக்கட்டும்; பார்த்துக் கொள்ளுகிறேன்!

நியா: சாருதத்தரே! (கிழவியைக் காட்டி) இந்த அம்மாளுடைய பெண்ணுக்கும் தங்களுக்கும் காதலாவது, அல்லது நட்பாவது உண்டா?

சாரு: எந்த அம்மாள்?

நியா: (கிழவியைக் காட்டி) இந்த அம்மாள்!

சாரு: (அப்பொழுதே பார்த்து) அம்மா! வணக்கம்!

கிழ: நீடூழி வாழ்க! தனக்குள் இவரா சாருதத்தர்? என் மகளின் யௌவனம் நல்ல இடத்தில்தான் போய்ச் சேர்ந்தது.

நியா: என்ன சாருதத்தரே! இவருடைய புதல்வி தங்கள் அன்புக்குப் பாத்திரமானவள்தானே?

[சாருதத்தன் வெட்கப்படுகிறான்]

சகா: ஓஹோ! செய்ததும் செய்துவிட்டு வெட்கம் வேறேயா?

சிரேஷ்டி: சாருதத்தரே! இந்த இடத்தில் வெட்கப் பட்டு முடியாது; சொல்லுங்கள்.

சகா: ஐயா! "வசந்தசேனைக்கும் எனக்கும் நட்பு உண்டு!" என்றுதானே சொல்ல வேண்டும்? அப்படிச் சொல்வதால் தவறு என்ன? யௌவனம் அல்லவா பிழை செய்தது? ஒழுக்கம் அல்லவே?

நியா: சாருதத்தரே! உம்மைப்பற்றி யிருக்கும் வழக்கு விபரீதமானது; ஆதலால், உள்ளதை உள்ளபடி வெட்கம் விட்டுச் சொல்ல வேண்டும்.

சாரு: வழக்கா? யாருடன் எனக்கு வழக்கு?

சகா: (கர்வத்துடன்) என்னோடு!

சாரு: பிதற்றாதே! நம்பும்படிப் பேசு!

சகா: கொலைகாரா! நாடகம் நடிக்கிறாயா?—நாடகம்? வசந்தசேனையைக் கொன்றுவிட்டு........

சாரு: சீ சீ! உளறாதே!

நியா: சாருதத்தரே! உண்மை தெரிய வேண்டும்; அந்தத் தாசிக்கும் உமக்கும்....நட்பு?

சாரு: ஆம்; உண்டு!

நியா: ஆனால் இப்போது எங்கே இருக்கிறாள் வசந்தசேனை?

சாரு: அவள் வீட்டிற்குப் போய்விட்டாள்!

சிரேஷ்: எப்போது போனாள்—எப்படிப் போனாள்—கூட யார் சென்றார்? விவரமாகச் சொல்லும்!

சாரு: (யோசித்துவிட்டு) வீட்டுக்குப் போனாள்! இதைத் தவிர வேறு விவரம் என்ன சொல்ல முடியும்?

சகா: அடேய்! என்னுடைய உத்தியான வனத்துக்கு அழைத்துக்கொண்டு போய், நகைகளுக்காக ஆசைப் பட்டு அவளைக் கொன்றுவிட்டு, இப்போது வீட்டுக்குப் போய்விட்டாள் என்று கூறுகிறாய்?

சாரு: சீ சீ மூடா! வாயை மூடு! அர்த்தமில்லாமல் பேசாதே; அழிந்து போவாய்!

நியா: உண்மை! சாருதத்தரை நிந்திப்பது என்பது, மலையை நிறுத்தலும், கடலைக் கடத்தலும், கனலை எடுத்தலும் போலாம். சாருதத்தராவது—தகாத செயல் செய்வதாவது! ஒருக்காலுமிராது!

சகா : நீதிபதியாரே! பக்ஷபாத விசாரணையும், ஒருதலைப் பக்கத் தீர்ப்பும் வெகு நன்றாயிருக்கிறது. உம்; நடக்கட்டும்.

நியா : சகாரா! உச்சிக் காலத்துச் சூரியனை உற்றுப் பார்க்கிறாய்! கனலைப் பிடிக்கக் கையேந்துகிறாய்; தியாக மூர்த்தியான சாருதத்தரைப் பழிக்கிறாய்.

கிழவி : உன் கண் பொட்டையாகி விடுமடா! உன் நா அழுகிவிடும். உன்னைப் பூமி விழுங்கிவிடும். சாருதத்தரை நீ அறியாவிட்டாலும் உலகம் நன்றாக அறிந்திருக்கிறது. என் தங்கப் பானை திருட்டுப் போனதென்று—பதிலுக்கு ஒப்பில்லாத மாணிக்க மாலையைக் கொடுத்தனுப்பிய இந்த உத்தமனை மனம் போனபடியெல்லாம் பேசிவிட்டு மகா பாவத்தைத் தேடிக்கொள்ளாதே! என் மகள் இறக்கவுமில்லை. அவர் கொல்லவுமில்லை. நீ போ வந்த வழியே!

நியா : ஆனால் சாருதத்தரே! வசந்தசேனை நடந்து போனாளா அல்லது, வண்டியில் சென்றாளா?

சாரு : அவள் போனபொழுது நான் அங்கே இல்லை. அதனால்....எப்படிப் போனாள் என்பது எனக்குத் தெரியாது.

[வீரகன் மிகுந்த கோபத்தோடு பிரவேசிக்கிறான்.]

வீரகன் : ஐயா! ஐயா!! விசாரிக்கணும்! விசாரிக்கணும்!

நியா : யாரை? வீரகா! ஏன் இவ்வளவு கோபமும் துயரமும்?

வீர: என் மானம் போச்சு; மரியாதை போச்சு; அந்த ஒட்டைச் சாண் பயல் என்னை எட்டி எட்டி உதைச்சுட்டானய்யா? நான் யார்? உங்களுக்குத் தெரியாதா? காவல்காரனுக்கெல்லாம் எசமான் ஆச்சே! வீரத்தோடு வேலை பார்க்கிற வீரகனாச்சே! இன்னிக்கு—என் அதிகாரமும், அலங்காரமும் அந்தப் பயலாலே அநியாயமாய்ப் போச்சே! போச்சே!!

நியா: வீரகா! விளங்கச் சொல்! யார் உன்னை உதைத்தவன்?

வீர: சந்தனகன் ஐயா?

நியா: எதற்காக?

வீர: ஆரியகனைத் தேடிகிட்டிருக்கையில், ஒரு மூடு வண்டி வந்திச்சு ஐயா! அவனும் பார்த்தான்! நானும் உள்ளே பார்க்கணுமின்னேன். அது கூடாதின்னு—என்னைத் தள்ளி, அடிச்சு, உதைச்சு, மிதிச்சு.......

நியா: யாருடைய வண்டி அது?

வீர: இதோ - இந்த சாருதத்தருடைய வண்டி ஐயா!

நியா: உள்ளே இருந்தவர்?

வீர: வசந்தசேனையாம்!

நியா: எங்கே போனது வண்டி?

வீர: "புஷ்பகரண்டம்" என்கிற உத்தியான வனத்துக்குப் போவதாக வண்டிக்காரன் சொன்னான் ஐயா!

சகா: கேளுங்கள்; நீதிபதியவர்களே! நன்றாகக் கேளுங்கள்.

நியா : சந்திரனை ராகு விழுங்க ஆரம்பிக்கிறது; கரை இடிந்து குளத்திலே விழுந்து தண்ணீர் கலங்குகிறது. சாருதத்தர் பக்கம் வன்மையொளி மங்குகிறது. அடே வீரகா! உன் வழக்கு பிறகு விசாரிக்கப்படும். முதலில் நீ ஒரு காரியம் செய்!

வீர : உத்தரவு!

நியா : குதிரை மேலேறி, உடனே அந்த உத்தியான வனத்திற்குப் போ; அங்கே - ஏதாவது பெண்ணின் சவம் இருக்கிறதா என்று பார்த்து வா! சீக்கிரம் போ ............

வீர : இதோ. [போகிறான்]

நியா : சாருதத்தரே! விசாரணை அதிகம் ஆக ஆக, சிக்கலும் அதிகம் ஆகிறது; சேற்றில் அழுந்திய பசுவைப் போல என் மனம் அப்படியே அழுந்தி விட்டது.

சாரு : கேடு வருங்காலத்தில் அடுக்காகத்தான் வருவது வழக்கம்!

வீர : (திரும்பி வந்து) ஆமா ஐயா!

நியா : என்ன ஆமாம்?

வீர : ஒரு பொம்பிள்ளையின் பிணத்தை நாயும் நரியும் கடிச்சுகிட்டிருக்குதுங்க!

நியா : பெண்ணின் பிரேதந்தான் என்பது எவ்வாறு தெரிந்தது?

வீர : நான் வீரகன் அல்லவா? அங்கே விழுந்து கிடக்கிற தலைமயிரு, கை, காலு, இதையெல்லாம் பார்த்தவுடனே நொடியிலே தெரிஞ்சு கிட்டேனுங்க!

நியா : சாருதத்தரே! தயவு செய்து உண்மையைச் சொல்லி விடும்!

சாரு : (மனமுடைந்து) உண்மையா? நான் வசந்த சேனையை இழந்து விட்டது உண்மைதானு?

சகா : ஜோஸியம் கேட்கிருயா—உன் கையாலேயே கொன்றுவிட்டு?

சாரு : புஷ்பம் நிறைந்த செடியினின்றும், ஒரு மலரைக் கொய்யவும் மனந் துணியாத நான், ஒரு மங்கையை - எழில் மிகுந்த ஒரு தேவ மாதை - அதிலும் என் வசந்த சேனையைக் கூசாமல் கொன்றேனென்ருல்? அதைவிட அபாண்டம் வேறென்ன வேண்டும்? ஆனுல் என் வசந்த சேனை எங்கே? என் வசந்தசேனை எங்கே?

சகா : நீதிபதியவர்களே! பக்ஷபாதமாக விசாரிக்கிறீர்கள்? கொலைபாதகன் என்று தெரிந்தும் - இன்னுமா இவனுக்கு உட்கார இடம் கொடுத்திருக்கிறீர்கள்?

சாரு : (ஆசனம் விட்டிறங்கி) இதோ! ஆசனம் விட்டு இறங்கிவிட்டேன்; விசாரியுங்கள். இனி விசாரியுங்கள். சீக்கிரம் வழக்கு முடியட்டும்!

சகா : (சாருதத்தன் இருந்த ஆசனத்தில் தான் அமர்ந்து) நீ உட்கார்ந்த இடத்தில் நான் உட்கார்ந்தால் தான் விசேஷம்! சாருதத்தா! சொல்லப்பா - சொல்லு! "கொன்றேன்" என்று ஒரு வார்த்தை சொல்லி விடு!

[மைத்திரேயன் அவசரமாக வருகிருன்.]

மைத்திரேயன் : சாருதத்தா! சாருதத்தா! எங்கெங்கெல்லாம் உன்னைத் தேடுவது? இங்கே என்ன செய்கிருய் நீ?

சாரு : கொலைக் குற்றம் சாட்டப்பட்டு விசாரணையில் இருக்கிறேன் அப்பா!

மைத் : கொலைக் குற்றமா? யாரைக் கொன்றதாக?

சாரு : கண்ணுக்கும் மனத்துக்கும் தெவிட்டாத விருந்தளிக்கும் என் ரதியைக் கொன்றதாக! வசந்தசேனையைக் கொன்றதாக!

மைத் : எவன் சொன்னவன்?

சாரு : (சகாரனைக் காட்டி) இதோ—பாலோக சிந்தையே இல்லாத இந்தப் பாதகன்!

மைத் : அவள்தான் வீட்டுக்குப் போய் விட்டாளே—சொல்வதுதானே?

சாரு : என்ன சொல்லியும் ஏறவில்லை. விதி எனக்கு எதிரியாக இருக்கிறது மைத்ரேயா!

மைத் : விதியா? நீதியை வெல்ல—அநீதியை சிருஷ்டி செய்ய விதியினாலும் முடியாது சாருதத்தா!

(நியாயாதிபதியைப் பார்த்து) நியாயாதிபதியவர்களே! கொஞ்சம் ஆலோசித்துப் பாருங்கள்; உஜ்ஜயினீ பட்டினத்தில் இன்றைக்கு நாம் காணும் அழகிய சோலைகளையும், மலர்ப் பொய்கைகளையும், எவன் உண்டாக்கினானோ—ஆலயங்களையெல்லாம் செப்பனிட்டு மண்டபங்களையெல்லாம் நன்கு அமைத்து, கேட்டவர்க்கு இல்லையென்னாமல் தன் பொருளையெல்லாம் வாரியிறைத்து, தான் வறுமையுற்றிருந்தும் பிறர் வறுமை கண்டு சகியாமல் இன்றும் எவன் வருந்துகிறானோ—அந்தப் புண்ணிய புருஷன்மேல் ஏதோ பொய்க் குற்றம் சாட்டி இப்போது நீதி சபைக்கு இழுத்திருக்கிறீர்கள்.

(யோசித்து) ஆம்; தாங்கள் இழுக்கவில்லை. நல்லவர்களுக்குத் தீங்கிழைப்பதையே தன் தொழிலாகக் கொண்ட இந்த நொண்டிக் காலை இழுத்திருக்கிறான்.

(சகாரனைப் பார்த்து) அடேய்! இரக்கமற்ற அரக்கனே! மன்மதக் குரங்கே! செடி கொடிகளில் காணும் தளிரையும் பூவையுங்கூடப் பறிக்க மனங் கூசும் சாருதத்தரா பெண் கொலை செய்திருக்கிறார்? என்னடா சும்மா நிற்கிறாய்? அவரா கொலை செய்தார்? பதில் சொல்லடா பாவி மகனே! இல்லை; உன் பதில் இங்கே தேவை இல்லை. இதோ—இந்தத் தடியால் ஒரே அடியாக அடித்து உன்னைப் பரலோகம் அனுப்புகிறேன். அங்கே போய்ப் பதில் சொல்.

[தடியை எடுத்துக்கொண்டு நிற்கிறான்.]

**சகா** : அடேய்! காக்கைத் தலையா! இப்போது உனக்கும் எனக்கும் விவாதம் இல்லை. (சாருதத்தரைக் காட்டி) இவருக்கும் எனக்கும்தான் வழக்கு! நீ குறுக்கே வராதே! போ!

**மைத்** : என்னடா சொன்னாய்? உனக்கும் அவருக்குமா வழக்கு? இல்லை; உனக்கும் இந்தத் தடிக்கும்....வழக்கு!

[அடிக்கிறான்; சகாரனும் பதிலுக்கு அடிக்கிறான்; மைத்திரேயன் கையில் இருந்த ஆபரண மூட்டை கீழே விழுகிறது.]

**சகா** : (அதை எடுத்து) இதோ—ஆபரணங்கள்! இதற்காகத்தான் வசந்தசேனை கொல்லப்பட்டாள்!

**மைத் :** (சாருதத்தனை ஒருபுறமாய் அழைத்துப் போய்) சாருதத்தா! விவகாரம் முற்றிவிட்டது; உண்மையான விஷயத்தைச் சொல்லி விடு நீதிபதியிடம்!

**சாரு :** மைத்திரேயா! அரசன் கொடுங்கோலன்! அவனிடம் உண்மைக்கு மதிப்பில்லை; மேலும், வசந்தசேனை கொலையுண்டது உண்மையானால், நான் உயிரைச் சுமந்து கொண்டு உலகத்தில் வாழவே முடியாது. பற்பல யோசனை வேண்டாம். வசந்தசேனை இந்த உலகத்திலே இல்லை என்றால், நானும் அவளைப் பின் தொடர வேண்டியது அவசியம். அவளிடம் செல்ல எனக்கும் வழி காட்டியாக வந்த விதியை நான் வரவேற்கிறேன்! நீ வருந்தாதே!

[நீதிபதியின் முன்பு போய் நிற்கிறான்.]

**நியா :** (வசந்தசேனையின் தாயாரிடம் காட்டி): அம்மா! இது தங்கள் புதல்வியின் ஆபரணங்கள்தானா?

**கிழவி :** (கவலையுடன் உற்றுப் பார்த்து): அதைப்போலத் தான் இருக்கிறது. ஆனால் அதுவல்ல!

**சகா :** ஏ! கிழக்குட்டி! கண்ணால் 'ஆமாம்' என்கிறாய்; வாயால் இல்லை என்கிறாயே!

**கிழவி :** நீ நாசமாய்ப் போவாய்!

**சிரே :** அம்மா! அப்படிப் பார்க்கிறீர்களே! உங்களுடையதுதானா இந்த நகை?

**கிழவி :** இல்லை ஐயா! தட்டானுடைய சாமர்த்தியத்தைப் பிரமித்தேன்! ஒன்றைப் போலவே பல நகைகள் செய்து விடுவான் அவன்!

நியா: இந்த ஆபரணங்களை இதற்கு முன்பு பார்த்திருக்கிறீர்களா?

கிழவி: சொன்னேனே—இல்லை இல்லை இல்லை என்று! ஒருவேளை எங்கள் நகைகளைப் போலவே செய்திருக்கலாம். எனக்கு, சரியாகத் தெரியவில்லை.

நியா: இது சகஜந்தான்! மனிதனைப் போல் மனிதனே இருக்கும்போது—ஒரு நகையைப் போல இன்னொன்று இருப்பதுதானா ஆச்சரியம்?

கணக்: ஆனால் இந்த ஆபரணங்கள் சாருதத்தருடையவா?

சாரு: அல்ல; அல்ல!

சிரே: அல்லவா—ஆனால் யாருடைய நகைகள்?

சாரு: அந்த அம்மாளுடைய மகளுக்குச் சொந்தமானவை தாம்!

நியா: சாருதத்தரே குரு பலம் குன்றியதோடு, செவ்வாயுடன் பகைமையும் பூண்ட ஒரு மனிதனைத் தொலைப்பதற்காகப் பெரிய தூமகேதுவும் தோன்றிவிட்டது. சரி, இந்த நகைகள் வசந்தசேனையின் உடலைவிட்டு எவ்வாறு நீங்கின?

சாரு: எவ்வாறோ நீங்கின!

நியா: சாருதத்தா! உண்மையை மறைக்க வேண்டாம்; ஒரு சமயம் அதனால் நன்மையே உண்டாகலாம்!

சாரு: வசந்தசேனை உயிர் நீத்தாள்; இனி எனக்கு என்ன நன்மை உண்டாக முடியும்? நான் இனி உயிர் வாழ்ந்து பயனில்லை.

(யோசித்து) ஆம்; தெரிகிறது! ஐயா! நியாயாதிபதியவர்களே! (சகாரனைக் காட்டி) இந்தப் பாவி-பரலோக சிந்தனையற்ற இந்த மூடன்—எங்கும் காணக் கிடைக்காத ஒரு எழில் மங்கையை—நல்லொழுக்கத்தின் நாயகமான ஒரு நாரீமணியை....ஐயோ....மீதியை அவனே சொல்லட்டும்!

சகா: கொன்றாய்! கொலை செய்தாய்! வதைத்தாய்! அடேய்! சொல்லுடா! நான் கொன்றேன் என்று சொல்.

சாரு: நீதான் சொல்லிவிட்டாயே!

சகா: கேட்டீர்கள் அல்லவா? இனி என்ன ஆலோசனை? அவனே ஒப்புக்கொண்டு விட்டான். நீதிபதியவர்களே! சட்டம் தூங்குகிறதா? விதியுங்கள் தண்டனை! உடனே விதியுங்கள்!

கிழவி: வேண்டாம்; வேண்டாம்; (அழுதுகொண்டு) என் மகள் இறக்கட்டும்; இவர் பிழைத்தால் போதும்! என் மகளைப் போல ஆயிரம் பேர் கிடைப்பார்கள்; சாருதத்தரைப் போல ஒருவர்கூட உலகிலே கிடைக்க மாட்டார்கள். மேலும், என் மகள் இறந்ததற்காக வழக்குத் தொடர வேண்டியவள் நான் அல்லவா? இந்த விஷயத்தில் அன்னியர் தலையிடுவது முறையல்ல; நீதியல்ல. ஆகையால் சாருதத்தரை விட்டு விடுங்கள்; விடுதலை செய்யுங்கள்.

நியா: அம்மா! தங்களை விசாரிக்க வேண்டியது இனி ஒன்றுமில்லை; நீங்கள் போகலாம்.

கிழவி: நான் போகிறேன்; சாருதத்தரை விடுதலை செய்யுங்கள்.

நியா: நான் விடுதலை செய்ய விரும்புகிறேன் அம்மா! ஆனால் சட்டம் அவரை விடுதலை செய்யாது! நீங்கள் போங்கள்!

கிழவி: ஆ! (அலறிக்கொண்டே போகிறாள்).

நியா: (ஓலையில் விசாரணையின் வரலாற்றை எழுதி) சோதனகா, இங்கே வா! (சோனகனிடம் ஓலையைக் கொடுத்து) விசாரணையின் வரலாற்றை இதில் எழுதி யிருக்கிறேன். அரசரிடம் கொண்டு போய்க் கொடு நான் சொன்னதாக நீயும் அவரிடம் சொல்; சாருதத்த ரைப் போன்றோருக்கு மரண தண்டனை விதிக்காமல் அவர் சொத்தை மட்டும் பறிமுதல் செய்து விடலா மென்று மனுநீதி கூறுகிறது. ஆதலால், அவருக்கு உயிர்ப் பிச்சை அளிக்கும்படி நான் வேண்டிக்கொண்ட தாக மன்னரிடம் தெரிவி.

சோதனகன்: (ஓலையைப் பெற்றுக் கொண்டு) கட்டளை!

[போகிறான்]

சகா: ஐயா! நீதிபதியே! இவனுக்குச் சொத்து ஏதையா சொத்து? அவனது உயிர் ஒன்றுதான் ஐயா அவனுக் குச் சொத்து! சொத்தைப் பறிமுதல் செய்வது என்றால்—அவன் உயிரைத்தான் பறிமுதல் செய்ய வேண்டும்—தெரியுமா!

சாரு: மைத்திரேய! நான் ரோஹசேனனைப் பார்க்க வேண்டும்; போய் அழைத்து வா!

[மைத்திரேயன் போகிறான்]

சோதனகன்: (கண்ணீருடன் திரும்பி வந்து தீர்ப்பு ஓலையைக் கொடுத்துவிட்டு அழுகையுடன்):—ஐயா! ஆயிட்டது!

நியா : (ஓலையைப் பிரித்து வாசிக்கிறார்) :
கொலைக் குற்றத்துக்குத் தண்டனை--கொலைதான்! அந்த நகைகளையே அவன் கழுத்தில் பூட்டி—பறை ஒலிக்க நகரெங்கும் கோலங் காட்டிக் கழுவிலேற்றுக!

"பாலகன்"

[சபையில் "ஹா ஹா" சப்தம்—காவலர் நீதிபதியின் குறிப்பறிந்து சாருதத்தனுக்கு விலங்கிடுகின்றனர். நீதிபதி முதலியோர் விசனத்துடன் எழுந்து செல்கின்றனர்.]

## காட்சி—26

[செவ்வலரி மாலையும், செஞ்சாந்துப் பொட்டும் அணிந்த சாருதத்தன் கொலையாளிகட்கிடையே வருகிறான்.]

**கொலையாளி 1. கேட்டை :** ஓய்! யாரையா வழியிலே நிக்கறது! விலகி நில்லுங்க ஐயா! இவன் யாரு தெரியலே? சாருதத்தன்; கொலை பண்ணிப்புட்டான்; அதுவும் ஒரு பொம்பிள்ளையை ஐயா! அதுக்காகக் கழுவிலேத்த மசானத்துக்குக் கொண்டு போறோம். பாக்காதிங்க; ஓடிப் போங்க! டேய்! ஸாருதத்தா! நடடா!!

**கொலையாளி 2. மூட்டை :** கேட்டே! இவரை என்னடா 'அவன் இவன்' என்கிறே? கடுகு சிறுத்தாலும் காரம் போகுமாடா? அவரு எம்மாத்தம் தானம் தருமம் பண்ணவரு தெரியுமா? எங்க வீட்டுலே இப்போ எரியற

விளக்குகூட அவரு குடுத்ததுடா! என்னமோ கால வெத்தாசத்தாலெ ஒரு கொலே பண்ணிப்புட்டாரு; நாம்ப தெனேக்கும் ஆயிரம் கொலே பண்றமே—இதை யாருடா கேக்கறது?

**சாருதத்தன்** : (தன்னை மறந்து) ஆ! வசந்தசேனு! வசந்தசேனு!!

**மைத்திரேயன்** : (ரோஹஸேசனனுடன் வந்து) குழந்தாய்! உன் தந்தையைப் பார்!

**ரோஹஸேனன்** : அப்பா! எங்கே போகிறீர்கள்! என்ன கழுத்திலே அலரி மாலே? நெற்றியிலே என்னப்பா இது பொட்டு?

**சாரு** : (அவனை எடுத்தணைத்து) ரோஹஸேனு! நான் இந்த உலகத்தைவிட்டு இன்னொரு உலகத்துக்குப் போகிறேண்டா.

**ரோஹ** : நானும் அங்கே வருகிறேனப்பா! மைத்திரேயரே! அம்மாவிடம் போய்ச் சொல்லி விடுங்கள்; நான் அப்பாவுடன் அந்த உலகத்திற்குப் போகிறேன் என்று!

**சாரு** : குழந்தாய்! அங்கெல்லாம் நீ வரக்கூடாது; மைத்திரேயா! இவனைப் பார்த்து ஆயிற்று. இனி, அழைத்துப் போ. ஆறுதல் சொல். இவனையும் இவன் தாயையும் காப்பது உன் கடமை! போய் வா!

**மைத்** : சாருதத்தா! யாரைப் போகச் சொல்கிறாய்? மைத்ரேயனையா? இன்பத்திலும் துன்பத்திலும் உன்னை விட்டுப் பிரிந்தறியாத இந்த மைத்ரேயனையா? வாழ்விலும் தாழ்விலும் உன்னோடிருந்து, நீ உண்ணும்போது தானும் உண்டு - நீ உறங்கும்போது தானும் உறங்கி - நீ

சிரிக்கும்போது தானும் சிரித்து - நீ அழும்போது தானும் அழுது - ஈருடலும் ஓருயிரும்போல அன்புப் பிணைப்பிலே அகப்பட்டு நட்புக்கொடியால் பின்னவிடப் பட்ட - உறவுக் ,கோயிலிலே உள்ளத்தைப் பிரதிஷ்டை செய்துவிட்ட இந்தப் பேதை பிராம்மணனையா பிரிந்து போகச் சொல்லுகிறாய்? ஐயோ! சாருதத்தா!

சாரு: ஆ! என் மைத்ரேயா!

[இருவரும் தழுவிக்கொண்டு அழுகின்றனர்]

ரோஹ: ஆ! அப்பா! அப்பா! [அழுகிறான்]

கொலையாளிகள்: ஐயோ பகவானே!

[கண்ணீர் விடுகின்றனர்]

கேட்டை: (திடீரென்று திரையில் பார்த்து) டேய்! மூட்டை! யாருடா அது? சின்ன எசமான் அரமனை மாடியிலேந்து கீளே குதிச்சுட்டான்?

மூட்டை: (பார்த்து) டே! டே! காலிலே விலங்கு இருக்குடா அவனுக்கு! அதோ! உருண்டு உருண்டு கிட்டே வர்ராண்டா!

கேட்டை: ஆமாம் பாரு! வெலங்குகூட முறிஞ்சு போச்சு! ஓடி! ஓடி வர்ராண்டா நம்ம கிட்ட!

[உடைந்து போன விலங்குடன் ஸ்தாவரகன் வருகிறான்.]

ஸ்தாவரகன்: டேய்! டேய்! நில்லுங்கடா! நில்லுங்கடா! வசந்தசேனையை இவரு கொல்லவில்லேடா!

மூட்டை: ஓ! சின்ன ராசா வண்டிக்காரனில்லெ நீ? பின்னே ஆரு கொன்னது?

ஸ்தாவ : அவனேதான்! சகாரனேதான் கொன்ருன். என் கண்ணுல் பார்த்தேன்.

மைத் : நீ பார்த்தாயா? அவள் எப்படி அவனிடம் சிக்கிஞள்?

ஸ்தா : என் வண்டியிலே மாருட்டமாக ஏறி விட்டாள். சகாரன் அவளைப் பார்த்ததும் கொன்னுட்டான். நான் சொல்லிடுவேன் இன்னு பயந்து, மாடியிலே எனக்கு விலங்கு பூட்டி வைச்சுட்டான். உயிருக்கு துணிஞ்சு நான் கீழே குதிச்சேன். இதோ - விலங்கு முறிஞ்சு போச்சு. சங்கதி சொல்லிட்டேன். (கொலையாளிகளைப் பார்த்து) அடேய்! இந்த புண்ணியவானைக் கொல்லாதிங்க; என் எசமான்தான் கொலை பண்ணினவன். அவனைப் புடிச்சிகிட்டுப் போங்க!

கேட்டை : என்னடா மூட்டை? மறைஞ்ச சூரியன் முளைக்குது பாத்தியா?

மூட்டை : (திரையில் பார்த்து) அதோ! பாருடா! சின்ன ராசாவே ஓடி வர்ராரு!

சகாரன் : (வந்து) அடா அடா! இந்தத் தரித்திரப் பிணம் போகிற போதே தெருவிலே இத்தனை பேர் பார்க்கிருர்களே - என்னைப் போலுள்ளவன் இதே மாதிரி கொலையாளிகள் மத்தியிலே போனல் எவ்வளவு கூட்டம் கூடிவிடும்? ஆமாம்; ஏன் இன்னும் தாமதம் செய்கிருர்கள்?

[அருகில் வந்து ஸ்தாவரகனைப் பார்த்து]

ஓ! வந்து விட்டாயா!

**ஸ்தாவ :** வந்தும் விட்டேன் ; சொல்லியும் விட்டேன் !

**சகா :** வா ! உன்னை மன்னித்து விட்டேன் ! வீட்டுக்குப் போகலாம் வா !

**ஸ்தாவ :** வீட்டுக்கா ? வசந்தசேனையைக் கொன்னது போதவில்லையா ? சாருதத்தரை வேறே கொல்றதுக்கு ஏற்பாடு செய்துட்டியா ?

**சகா .** என்னடா உளறுகிறாய் ? நான் மாணிக்கக் குடம் ஆயிற்றே - பெண்ணைக் கொல்வேனா ?

**ஸ்தா :** அடேய் ! கொன்ன பாவி நீதான் ! சாருதத்தர் அல்ல !

**கொலையாளிகள் :** ஆமா. ஆமா !

**சகா :** உங்களுக்கு எப்படித் தெரிந்தது ?

**கொலையாளிகள் :** இதோ - உங்க வண்டிக்காரன்தான் சொல்றானே - இன்னென்ன வேணும் ?

**சகா :** (ஸ்தாவரனை ஒருபுறமாய் அழைத்துப் போய்) ஸ்தாவரகா ! நீ நல்லவன் இல்லையா ? நான் சொல்வதைக் கேள். [கடகத்தைக் கழற்றிக் கொடுத்து] இந்தா ! இது உனக்கு வெகுமதி ! வாங்கிக்கொண்டு வீடு போய்ச் சேர் ; என்னைக் காட்டிக் கொடுக்காதே !

**ஸ்தா :** முடியாது ; உன்னை அவர்கள் கொன்றால்தான் எனக்குத் தூக்கம் வரும் !

**சகாரன் :** (கொலையாளிகளிடம் வந்து) இவன் சொல்வது பொய் ; இவன் என் வேலைக்காரன். என் தங்கச்சாலையில் காவல் வைத்திருந்தேன். அங்கே தங்கத்தைத் திருடி விட்டான். அதற்காக அடித்தேன். உதைத்தேன்.

விலங்கு பூட்டி அடைத்தும் வைத்தேன். அதனல் - என் பேரில் இவனுக்கு விரோதம்!

ஸ்தா : இல்லவே இல்லே. நான் சொல்றதுதான் நிஜம்! இதோ பாருங்கள்! மெய்யை மறைக்கச் சொல்லி இதை என்னிடம் குடுக்கருரு!

[கடகத்தை காட்டுகிருன்]

சகா : (அதைப் பிடுங்கிக்கொண்டு) ஓ ஓ! பார்த்தீர்களா? இதுதான் அவன் திருடின தங்கம்! இதற்காகத்தான் நல்ல உதை வாங்கினுன்; அவன் முதுகைப் பாருங்கள். தெரியும் அடிபட்ட தழும்புகள்!

கேட்டை : (ஸ்தாவரகனின் முதுகைப் பார்த்து) பளுக்க பூசை வாங்கியிருக்கிருன்; திருடினுக்கா - ஆருதான் சும்மா விடுவாக?

மூட்டை : டே! சாவரக! போரும் நீ சாச்சி சொன்னது! போடா எசமான் கூப்பட்ருரு! இனிமேயாவது திருடாமெ - திட்டாமெ புத்தியா நடந்துக்கோ!

சகா : விரட்டுங்கள் அவனை!

கேட்டை : உம். போடான்னு....போ!

ஸ்தா : சாருதத்தரே! நான் என்ன செய்ய முடியும்? வேலேக்காரன் பேச்சை யார் நம்புவாங்க? (மேலே பார்த்து) கடவுளே! உனக்குக் கண்ணில்லேயா.

[போகிருன்.]

சகா : அடேய்! சீக்கிரம். சீக்கிரம். சாருதத்தனைக் கொல்லுங்கள்!

கேட்டை : அவ்வளவு அவசரமாயிருந்தால்—நீங்களே கொல்லுங்க எசமான்!

ரோஹஸேனன் : இல்லை; என்னைக் கொன்று விடுங்கள்; என் அப்பாவை விடுங்கள்.

சகா : அடேய்! இந்தப் பையனையும் அவனோடு கொன்று போடுங்கள். விடாதீர்கள்.

சாரு : (அச்சத்துடன்) ரோஹஸேனா! வீட்டுக்குப் போ! இந்தப் பாவி உன்னையும் கொன்று விடுவான்! (பூணூலைக் கழற்றி அவனிடம் தந்து) இந்தா உனக்குக் கொடுக்க—என்னிடம் இதுதான் இருக்கிறது. மைத்திரேயா! குழந்தையைக் கொண்டு போய் வீட்டில் விட்டு விடு.

சகா : என்னடா—இந்தப் பையனையும் சேர்த்துக்கொல்ல வேண்டும்—தெரிந்ததா ?

கேட்டை : அது முடியாதுங்க. கொலை பண்ணவனை மட்டுந்தான் கழுவில் ஏத்தச் சொல்லி கட்டளை பிறந்திருக்கு!

(ரோஹஸேனனைப் பார்த்து) கொளந்தே! நீ வீட்டுக்குப் போயிடு. நீ எங்களோட வரக்கூடாது!

மைத் : சாருதத்தா! குழந்தையை வீட்டிலே விட்டுவிட்டு நான் வந்து சேருகிறேன்!

சாரு : நீ வராதே! என் மனைவியையும் மகனையும் காப்பாற்று!

மைத் : அதற்குத் தெய்வம் இருக்கிறது; ஆனால் அந்தத் தெய்வத்தால்கூட என்னையும் உன்னையும் பிரித்துவைக்க முடியாது. இதோ—இவனை வீட்டிலே விட்டு நொடியில் வருகிறேன்,

[ரோஹஸேனனைத் தூக்குகிறான்]

**ரோஹ :** வேண்டாம். நான் என் அப்பாவுடன் போகிறேன்! மைத்திரேயன் எடுத்துச் செல்கிருன். ரோஹசேனன் துடிக்கிருன். திரைக்குள்ளும் அவனது குரல்) "அப்பாவுடன் போகிறேன்" கொலையாளிகள் சாருதத்தனைக் கொலைக் களத்திற்கு அழைத்துப் போகின்றனர்.)

## காட்சி—27

[ராஜவீதி. ஆரியகன், சந்தனகன், விடன் முதலியோர்; புரட்சி உத்வேகத்துடனும், வெற்றி கோஷத்டனும் வருகிருர்கள்.]

**சர்விலகன் :** (திரையில் பார்த்து) வாருங்கள்; வாருங்கள்; குடிமக்களே! ஒன்று சேருங்கள்; ரத்தக் கொதிப்பின் லட்சியத்தை உணருங்கள். அக்ரம அரசாங்கத்தை உதையுங்கள்; மிதியுங்கள்; குழி தோண்டிப் புதையுங்கள்!

**ஆரியகன் :** சிறைக்கஞ்சோம்; தடியின் அடிக்கஞ்சோம்; அரசப் பேயின் தலைமுடிக் கஞ்சோம். புறப்படுங்கள். போர் தொடுங்கள். ஐக்யமே பலம்; புரட்சியே ஆயுதம்! வெற்றியே லட்சியம்! கிளம்புங்கள்!

[இன்னும் அநேகர் வந்து சேருகின்றனர்]

**விடன் :** அக்ரம அரசாங்கம்

**எல்லோரும் :** வீழ்க!

**விடன் :** ஆரியகன் அரசாட்சி

**எல் :** வாழ்க!

விடன் : புரட்சி
எல் : ஓங்குக
விடன் : புரட்சி
எல் : ஓங்குக.

[பாடுகிறார்கள்]

பாட்டு :

*புரட்சியே ! புரட்சியே !! புரட்சியே !!!*
*விழித் தெழுவோம்; புரட்சியினால் வெற்றி புனைவோம் ;*
*அழித் திடுவோம் அல்லலெலாம் ; அகந்தை களைவோம் ;*
*பழித் திடுவோம் பயந்தொளியும் பாழ் மனத் தோரை ;*
*தழைத்த முடி யரசொழிய நடத்துவம் போரை ;*
*வாய்ப்பூட்டு, கைப்பூட்டு, வளர் மனப் பூட்டால்:*
*தேய்ந்தவர்கள், மாய்ந்தவர்கள், தேசத்தில் கோடி ;*
*தாய்ப் பாலைத் தாம் பிடுங்கிச் சேய்களைக் கொன்றார்;*
*ஏய்ப்பா ரென்றே யறிந்தோம் ; இன் றழு கின்றார் ;*
*புரட்சியே ! புரட்சியே !! புரட்சியே !!!*

[போகிறார்கள்]

## காட்சி—28

*[ராஜ வீதியின் மற்றொருபுறம் ; பிக்ஷு ஸம்வாஹகனும், வசந்தசேனையும் வருகிறார்கள்.]*

**ஸம்வாஹகன் :** உபாஸிகே நமது ஆசிரமத்தில் இன்னும் கொஞ்ச காலம் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கலாம்; அதற்குள்.......

**வசந் :** சாருதத்தரைப் பார்ப்பதற்காக என் கண்கள் துடிக்கின்றன. சீக்கிரம் என்னை அவரிடம் சேர்ப்பியுங்கள் !

**ஸம் :** வாருங்கள்! இந்த ராஜ வீதி வழியாகப் போனல்—அவர் வீடு சமீபத்தில் இருக்கிறது. விரைவில் போய்ச் சேரலாம்.

**வசந் :** (திரையில் பார்த்து) பிக்ஷு! ஆதென்ன பாருங்கள்! தூரத்தில் பேரிரைச்சல் கேட்கிறது! அங்கங்கே என்ன கூட்டம்? எங்கே பார்த்தாலும் கலவரமும் திகிலும் மிகுந்து—இந்த உஜ்ஜயினியே கவிழ்ந்து விடும் போல் தோன்றுகிறதே?

**ஸம் :** ஆம் தாயே! அதோ—என்னமோ பறையொலி கேட்கிறது.

**வசந் :** காது கொடுத்துக் கேளுங்கள்!

[திரைக்குள் பறையொலிக்குப்பின்-
பிரகடனம் செய்யப்படுகிறது]

**பிரகடனம் :** "நகைகளுக்கு ஆசைப்பட்டு வசந்தசேனை என்னும் ஸ்த்ரீயை சாருதத்தன் கொன்று விட்டான்; அதற்காக மரண தண்டனை விதிக்கப்பட்டு கொலைக்களத்துக்குக் கொண்டு போகப்படுகிருன். ஆகையால் கெடுவன செய்யேல்! கொடியன செய்யேல்! ஜாக்கிரதை! ஜாக்கிரதை!! ஜனங்களே ஜாக்கிரதை!!!

["டம் டம் டம் டம்!" என்னும்
பறையொலி]

**வசந் :** ஸ்வாமீ! என்ன விபரீதமிது?

**ஸம் :** ஆம்; தலைக்குமேல் வெள்ளம்; உடனே தடுக்க வேண்டும்.

**வசந் :** கொலைக் களம் எங்கே?

ஸம் : அதோ—கொஞ்ச தூரத்தில்; விரைந்து நடக்க வேண்டும்.

வசந் : வாருங்கள்; வாருங்கள்; [போகிறார்கள்]

## காட்சி— 29

[கொலைக் களம். கொலையாளிகள், சாருதத்தன், சகாரன் முதலியோர்.]

சகாரன் : அடேய்! இவனைக் கொல்லுங்களடா! நான் என் கண்ணுலே பார்க்க வேண்டும்!

கேட்டை : டேய்! மூட்டை! இன்னிக்குக் கொல்லுற முறை உன்னுடைதுடா!

மூட்டை : இல்லை இல்லை; உன்னுடைதுதான்! நேத்துத் தான் என்னுடை முறை!

கேட்டை : சரி; சீட்டுப் போட்டுப் பார்க்கலாம்— இருடா!

(சீட்டுப் போட்டுக் கொண்டு) டேய்! என்முறை வந்தால் மூணேமுக்கால் நாளிகை நான் காத்திருக்கப் போறேனடா!

மூட்டை : அதென்னடா—சாய்த்தரமா?

கேட்டை : எங்க அப்பன் சொர்க்கத்துக்குப் போகச்சே சொல்லிட்டுப் போன விஸயம்டா அது!

மூட்டை : என்ன இன்னு?

கேட்டை : "குத்தவாளியை உடனே தீர்த்துப்புடாதே! கொஞ்ச நேரம் ரோஜனை பண்ணிகிட்டே நின்னுகிட்டிரு; ஒரு சமயம் எவனுச்சும் பணத்தைக் கொட்டி

மீட்டுப்புடுவான். இல்லாட்டி—ராசாவுக்குப் புள்ளே பொறந்து விடுதலே கிடைக்கும்; ஒருவேளே, ஆனே அறுத்துகிட்டு கிளம்பினுல், அதனுலேயும் குத்த வாளியை விட்டு விடுவாக; அதுவும் இல்லாமெ - திடீர்னு ராஸாவே மாறிப் போய் - வேறே ராஸா வந்து தண்டனே பெத்தவனே எல்லாம் விடச் சொல்லியும் உத்தரவு போட்டுடலாம்" இன்னு சொல்லியிருக்கிருருடா!

மூட்டை : எல்லாம் சரித்தான்! ராஜா எப்படிடா மாறிடுவாரு?

சகா : அடேய்! என்னடா கதை பேசுகிறீர்கள்? ஏற்றுங்களடா இவனேக் கழுவிலே!

சாரு : ஆ! நான் அழிந்து போனேன். [உட்காருகிருன்]

சகா : என்னடா இவன் உட்கார்ந்துட்டான்?

மூட்டை : ஐயா சாருதத்தரே! பயப்படுகிறயா?

சாரு : அழிவைக் கண்டு அஞ்சவில்லே. பழியைக் கண்டு பயப்படுகிறேன் அப்பா!
(எழுந்து நின்று) இதோ நின்றுவிட்டேன்! உங்கள் கடமையை முடித்துக் கொள்ளுங்கள்!

கேட்டை : தருமதுரையே விஜனப்படாதிங்க! சூரிய சந்திராதிகளேக்கூட கஸ்டம் விடாதில்லெ. மனிசன் எம் மாத்திரம்? உம்; தைரியமா யிருங்க! கடைசியாக எதையாச்சியும் நினேச்சுகிடுங்க!

சாரு : நினேத்துக்கொள்ளுகிறேன்;....என் தவத்தால் கிடைத்த தர்ம பத்தினி தூதை! என் மனத்திலே மகிழ்ச்சியை நிரப்பிய மகன் ரோஹஸேனன்! என் மற்ருெரு உயிர் போன்ற நண்பன் மைத்திரேயன்! என்

வாழ்க்கையிலே ஒளியூட்டி—மறு உலகத்துக்கும் வழி காட்டி என்னை அழைத்துச் செல்லும் பிரேமைத் தெய்வம் வசந்தசேனை ! அவளைக் கொன்றுவிட்டு அந்தப் பழியை என்மேல் சுமத்தி என் முடிவைக் காண்பதற் காகக் காத்திருக்கும்—இந்தப் படுபாவி சகாரன் ! (மகிழ்ச்சியுடன் பூரித்து) அந்த உலகத்திலும் என்னை வசந்தசேனையுடன் சேர்த்து வைக்க விரும்பும் கருணை மிகுந்த கடவுள் ! இவர்கள் எல்லோரையும் நினைத்துக் கொள்ளுகிறேன்.

மூட்டை : சரி ; உசிரு போகிற வரைக்கும் விஜனம் இருந்துகிட்டே தானுங்க இருக்கும். கழுவிலே மாட்டினா கஸ்டம் அதிகமுங்க ! சரியா நில்லுங்க ! கத்தியாலெ கழுத்தை ஒரே சீவாய்ச் சீவிப்புட்றம்.

சாரு : (நிமிர்ந்து நின்று)
இதோ நிமிர்ந்து நிற்கிறேன் ; ஆகட்டும் !

மூட்டை : அடேய் ! கேட்டை ! நடத்து !

கேட்டை : நீ நடத்து ! உன் முறை தெரியுமில்லெ !

மூட்டை : இருந்தா என்ன ? நீ இன்னிக்குக் கடன் வாங் கிக்கோ, என் முறையை !

கேட்டை : சீ சீ ! எது பட்டாலும் படலாம் ; கடன் மட்டும் படவே கூடாது ! எனக்குக் கடன் வாணாம் அப்பா !

மூட்டை : சரி, எனுமாவே வைச்சுக்கோ ; நடத்து காரி யத்தை !

கேட்டை : போடா போ ! எனும் வாங்க ; நான் என்ன பிச்சைக்காரன்னு நினைசசியா ?

(திரையில் பார்த்து) அதோ யாரோ, வர்ராங்க; சுருக்கா முடிக்கல்லேன்னு நம்ம தலே போயிடும்; எடு கத்தியை!

**மூட்டை**: (கத்தியை எடுத்து) அடி மாரியாத்தா! நீதான் காப்பாத்தணும்!

[வெட்ட ஓங்குகிறான்; ஸம்வாஹகனும் வசந்தசேனையும் ஓடி வருகிறார்கள்.]

**ஸம்**: நில்! (கொலையாளியின் கையைப் பிடித்துக் கொள்ளுகிறான்).

**வசந்**: ஆ! சாருதத்தரே!

[சாருதத்தரின்கால்களைப் பிடித்துக் கொள்ளுகிறாள்.]

**கேட்டையும், மூட்டையும்**:
அடேய்! சாமியாருடா! சாமியாருடா!!

[கத்திகளைக் கீழே போட்டுவிட்டுப் பிக்ஷுவின் பாதங்களில் விழுகிறார்கள்.]

**சகா**: (வியப்புடன்) யார்—வசந்தசேனையா?

**வசந்**: ஆமாமடா பாவீ! உன்னால் இறந்தேன்; சாருதத்தரின் அன்பினாலும், இந்தப் பிக்ஷுவின் அருளினாலும் மீண்டும் பிழைத்தேன்.

**மூட்டை**: அடேய்! வஜந்தசேனேயேடா! வஜந்தசேனேயேடா! பொளேச்சு இருக்கிறாடா!

**கேட்டை**: அடேய்! மாரியாத்தாளோட சத்தியத்தைப் பாத்தியா! எங்கப்பனோட வாக்கு ஒரு நாளும் பொய்யாப் போகாதுடா!

ஸம் : கொலையாளிகளே! கேளுங்கள்! வசந்தசேனையைக் கொல்லத் துணிந்தவர் சாருதத்தர் அல்ல; இதோ—இந்தச் சகாரன்!

கேட்டை : (கோபத்துடன்) ஆ?

ஸம் : ஆம்; இவன் இவளைக் கழுத்தை நெறித்து மூர்ச்சையடையச் செய்தான்; கீழே கிடத்தி இலைச் சருகுகளால் மூடிவிட்டுத் தன் பாவத்தை மறைத்துக்கொள்ள முயன்றான். ஆனால் தெய்வம் ஒன்றிருக்கிறது; நம்முடைய கண்ணுக்கு அது தெரியாவிட்டாலும், அதன் கண்ணுக்கு நாமும் நம்முடைய செயல்களும் தெரியாமல் இல்லை. அந்தத் தெய்வம் உண்மையை நிலை நாட்டுவதற்காகவும், நிரபராதியான சாருதத்தரைக் காப்பாற்றுவதற்காகவும், வசந்தசேனைக்குப் பிழைப்பு மூட்டி அவளை இங்கேயே கொண்டுவந்துவிட்டது. உண்மைச் சூரியன் உதித்ததைக் கண்டு, பொய்ம்மையிருள் அதோ பதுங்குகிறது. (சகாரனைக் காட்டி) அதோ! ஓட யத்தனிக்கிறான். பிடித்துக் கொள்ளுங்கள்! பிடித்துக் கொள்ளுங்கள்.

[சகாரன் ஓடுகிறான்.]

கொலையாளிகள் : "பிடி! பிடி!" (என்று அவனைத் தொடர்ந்து ஓடுகின்றனர்.)

சாரு : (அதிர்ச்சியால் தளர்ந்து) வசந்தசேனே! நான் எந்த உலகத்தில் இருக்கிறேன் இப்போது?

வசந் : சத்தியத்துக்கும் தருமத்துக்கும் பழுது நேராத பூவுலகத்தில் ஸ்வாமீ!

சாரு : ஆனால்—நான் இறந்து போகவில்லையா?

வசந் : தாங்கள் இறக்கவில்லை; தங்கள் பேரில் சுமத்தப் பட்ட பழி இறந்தது. சகாரனுடைய வாழ்வு செத்தது! பாலகனுடைய கொடுங்கோல் மாண்டது. ஸ்வாமீ! ஏன் இவ்வளவு அதிர்ச்சி? இதோ—இந்தத் துறவியைப் பாருங்கள். இவர்தாம் எனக்கு உயிரளித்தார்; தங்களது மனத் தளர்ச்சியையும் போக்கி விடுவார்.

சாரு : ஸ்வாமீ! வணங்குகிறேன்.

ஸம் : நமோ புத்தாய! நமோ புத்தாய! ஐயா! நான் யாரென்று தெரியவில்லையா? தங்களால் வணங்கத் தக்கவன் அல்ல; வாழ்த்தத் தக்கவன் இந்த அடிமை!

சாரு : யார் தெரியவில்லையே?

ஸம் : நான் ஸம்வாஹகன்! இந்த உபாஸிகையின் பேருளால்—இந்தப் பிக்ஷுவென்னும் பாக்கியம் கிடைத்தது!

சாரு : ஸம்வாஹக! ஸம்வாஹக!! (ஆலிங்கனம் செய்து கொள்கிறான்).

[ஓர் ஒற்றன் அவசரமாக வருகிறான்.]

ஒற்றன் : ஐயா! பிக்ஷுவே! ஸம்வாஹகரே! சர்விலகன்! உமக்கு ஒரு செய்தி அனுப்பியிருக்கிறார். அவசரம்!

ஸம் : என்ன? உடனே சொல்!

ஒற் : அது ரகசியம்! இங்கே இருப்பவர்கள் எல்லோரும்....

ஸம் : நம்மைச் சேர்ந்தவர்களே! தாராளமாகச் சொல்!

ஒற் : புரட்சிக் கூட்டம் அரண்மனைக்குள் புகுந்து விட்டது; பாலகனைப் பழி வாங்கி ஆரியகனை அரியாசனத்தில் அமர்த்துவதற்கு முகூர்த்த வேளை நெருங்கி

விட்டது. ஆகையால், நீரும் உம்மைச் சார்ந்தவர்களும் உடனே கொலுச் சபைக்கு வர வேண்டும் என்று உம்மி மிடம் சொல்லச் சொன்னார்.

ஸம்: இதோ வருகிறோம்!

சாரு: ஆஹா! சந்திரனைவிட்டு ராகு விலகியதா? உஜ்ஜயினியைப் பிடித்த உத்பாதம் மறைந்துவிட்டதா? அணைந்து போன என் வாழ்க்கையின் விளக்கு மறுபடியும் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறதா? என்பேரில் சுமத்தப் பட்ட பழியும் பாவமும் பறந்து போய், பாக்கியமும் நல் வாழ்வும் என்னைச் சூழ்ந்துகொண்டனவா?.................. வசந்தசேனே! வா! அன்பன் ஆரியகனுக்கு வாழ்த்துக் கூறுவோம்; சர்விலகனுக்கு வந்தனம் செலுத்துவோம்; தூதையிடம் போய், அவளைத் தீக்குளிக்காமல் காப் பாற்றுவோம்; ரோஹசேனனின் சோகத்தைத் தீர்ப் போம்; மைத்திரேயனுக்கு மகிழ்ச்சி விருந்தளிப்போம்.... ஸம்வாஹகா! புறப்படு!

[போகிறார்கள்.]

## காட்சி—30

*[ராஜ வீதி; மைத்திரேயன் "சாருதத்தா சாரு தத்தா" என்று கூவி அழுதுகொண்டே அவசரமாக வருகிறான்; எதிரில் சாருதத்தன் முதலியோர் வரு கிறார்கள்.]*

மைத்: சாருதத்தா! சாருதத்தா!

சாரு: மைத்திரேயா! பிழைத்துவிட்டேன்!

மைத்: பிழைத்தாயா? பிழைத்தாயா?

சாரு : ஆம்; இதோ வசந்தசேனை! அதோ ஸம்வாஹகன்!

மைத் : இதோ சாருதத்தன்! இதோ மைத்திரேயன்!

[தழுவிக்கொண்டு மகிழ்ச்சி பொங்க அழுகிறான்.]

சாரு : என்ன மைத்திரேயா? நான் தான் பிழைத்து வந்து விட்டேனே!

மைத் : சாருதத்தா! உடனே போகா விட்டால் நிலைமை மிஞ்சிவிடும்; தூதையம்மாள்........

சாரு : நினைத்தேன்; தீக்குளிக்கத் துணிந்துவிட்டாளா?

மைத் : ஆம்! யார் தடுத்தும் கேட்கவில்லை! வா! வா!

[எல்லோரும் ஓடுகிறார்கள்]

## காட்சி—31

*[கொலுச் சபை; சிம்மாசனத்தின் அருகில், விலங்கிடப்பட்டு பாலகன் நிற்கிறான்; அமைச்சன் ஆனந்தனும் அதே நிலையில் இருக்கிறான். மந்திரி மதிவாணர் மட்டும் பதவியை இழக்காமல் அமர்ந்திருக்கிறார். புரட்சிக் கூட்டம் சர்விலகன் தலைமையில் அமைதியோடு நிற்கிறது; சாருதத்தன் நடுவிலும், வசந்தசேனையும் தூதையும் அவனது இரண்டு பக்கங்களிலுமாக அமர்ந்திருக்கின்றனர். ரதனிகை, மதனிகை, கிழவி, ரோஹசேனன், மைத்திரேயன், சோதனகன் முதலிய எல்லோரும் குதூகலத்துடன் காணப்படுகின்றனர்.]*

சர்விலகன் : [சிங்காதனத்தைக் காட்டி] ஆரியக! ஏறு சிம்மாசனம்! எடு செங்கோல்!

[ஆரியகன் சிம்மா சனத்தில் உட்காருகிறான். சர்விலகன், பாலகனது சிரத்திலிருந்து மகுடத்தைஎடுத்து ஆரியகனுக்குச் சூட்டுகிறான்.]

சபை : அரசர் ஆர்யகன் வாழ்க !
அரசர் ஆர்யகன் வாழ்க !

சர் : சபையோர்களே! சாருதத்தருடைய தருமத்தின் பயனால் இன்று நமக்கு ராஜ்ஜியம் கிடைத்தது. அவருடைய கட்டளையின்படியே தான் நீதி வழங்க வேண்டும்,

சபை : அதுவே சரி. அதுவே சரி.

சர் : (சாருதத்தரிடம் சென்று காதில் எல்லாம் கேட்டு வந்து)

சாருதத்தர் சொல்லியபடி, அரசர் ஆக்ஞாபிக்கிறார்—இல்லை, அருள் புரிகிறார். அதாவது :—வசந்தசேனையைப் போன்ற உத்தமிகள் வாழும் இந்த நாட்டிலே—எந்தப் பெண்மணியையும் “விலைமகள்” என்னும் விபரீதப் பெயரால் அழைக்க நியாயமல்லை. ஆகையால் உஜ்ஜயினீபுரத்திலே இன்று முதல் விலைமகள் இல்லை. எல்லோரும் குலமகள் ஆகிவிட்டனர்; மணத்துக்கு உரிய ‘வது’ ஆகிவிட்டனர்.

(சபையோர் கரகோஷம் செய்கின்றனர்)

சர் : மேலும், துறவு பூண்ட ஸம்வாஹகன்—மடங்களுக்கெல்லாம் தலைவர் ஆகிறார். ஸ்தாவரகனின் அடிமைத் தளை நீங்கி விட்டது; சந்தனகன் சேனாபதியாகி விட்டான்.

[கொலையாளிகள் சகாரனைப் பிடித்துக் கொண்டு வந்து நிறுத்துகின்றனர்.]

சகா : (ஓடிப் போய் சாருதத்தன் காலில் விழுந்து) சரணம் சரணம்! கட்டவிழ்த்த கழுதையைப்போல நெடுந்தூரம் ஓடினேன்; நாயைக் கட்டி இழுத்து வருவதைப் போல என்னை இழுத்து வந்து விட்டார்கள். தங்களைத்

தவிர வேறு கதி இல்லை. காப்பாற்ற வேண்டும்! காப்பாற்ற வேண்டும்!

சர் : சாருதத்தரே! உத்தரவிடுங்கள்! இவனைக் கொன்று விட வேண்டும்.

சாரு : சரணமடைந்து விட்டான்; ஆதலால் ஆயுதம் எடுக்கக்கூடாது.

சர் : ஆனால், நாய்களை விட்டுக் கடிக்கச் செய்வோம்.

சாரு : மகா பாவம்! சரண் அடைந்தவனிடமும், இறந்து போனவனிடமும் பகைமை பாராட்டலாமா?

சர் : ஆனால் இவனை......

சாரு : விட்டு விடுங்கள்! சகாரா! இனிமேலாவது தீயன விடுத்து நன்மையே செய்து வாழ்! சர்விலகரே! இக் கொலையாளிகளின் மனத்திலே தூய்மையும் பக்தியும் நிரம்பிக் கிடக்கின்றன! அவர்களுக்கு இனி இந்தக் கொடுந் தொழில் வேண்டாம். புண்ணிய மார்க்கத்திலே அவர்களைப் புகவிடும்!

பாலகன் : ஐயா! நான் மட்டுந்தானா—உமக்கும் பகையாகி விட்டேன்?

சாரு : பாலகரே! நீர் எனக்குப் பகையாகவில்லை. நீதிக்கும் பிரஜைகளுக்கும் பகையாகிவிட்டீர்! ஆதலால்........

சர் : இவனைக் கொல்ல வேண்டியதுதானே?

சாரு : கூடவே கூடாது! அவர் பிரஜைகளுள் ஒருவராகி விட்டார். குடிமக்களின் கஷ்ட சுகங்களை அவர் இனி மேல்தான் நன்குணர்வார்.

ஆரியகன் : சாருதத்தரே! தர்மசீலரே! இந்தப் பதவி தாங்கள் அளித்த பிச்சை! இந்த ஏழை ஆரியகன்—

தாங்கள் அபயம் அருளியதால் இன்னும் உயிருடன் இருக்கும் அடிமை! எனக்கும் ஏதாவது கட்டளை யிடுங்கள்!

சாரு: ஆரியகரே! நான் கட்டளையிடுவதற்கு ஒன்றுமில்லை; அரசர்களுக்கெல்லாம் ஆண்டவனே கட்டளையிட்டிருக் கிறார்............நீர், ராஜ்ஜியம் என்னும் பாரத்தைச் சுமந்து, செங்கோல் என்னும் தருமத்தை அணிந்து, மகு டம் என்னும் நீதியைப் புனைந்து, அரியாசனத்துக்கு மாசு நேராமல் அதன் மேல் அமர்ந்து, குடிகள் எல்லோ ரையும் சொந்த மக்கள் என்றுணர்ந்து, தன்னுயிர் போல பிற உயிரையும் நினைந்து, எங்கும், எவர்க்கும், எப் போதும் நன்மையே புரிந்து நாட்டை வளர்ப்பதிலே தாய் போலவும், முன்னுக்குக் கொண்டு வருவதிலே தந்தை போலவும், உதவி புரிவதிலே தோழனைப் போல வும், பகைவரால் தீங்கு நேராமல் காப்பதிலே நம்பிக்கை மிகுந்த சேவகனைப் போலவும், நியாயம் வழங்குவதிலே பக்ஷபாதமற்ற கடவுளைப் போலவும் இருந்து, பொன் னும் புகழும் பெற்று, பொருளும் அருளும் பெற்று, மதியும் மக்களும் பெற்று, வன்மையுற்ற தோளுடனும், வேந்தர் பணியும் தாளுடனும், இந்தப் பூமண்டலத்தைக் கற்பகோடி காலம் ஆண்டு வருவீராக!

சபை: வாழ்க! மஹாராஜா ஆரியகர்! வாழ்க!

வாழ்க! தர்மராஜா சாருதத்தர்! வாழ்க!

முற்றும்

சுபம்.

